# பெண்களே!

## உங்களுக்குத்தான்

S.H.M. இஸ்மாயில் ஸலபி

ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா

பெண்களே! உங்களுக்குத்தான்

S.H.M. இஸ்மாயில் ஸலபி

# إلى النساء المسلمات

(باللغة التاملية)

المؤلف:محمد اسماعيل شاه الحميد (السلفي)

تم اصدار هذا الكتيب بمناسبة افتتاح مسجد أهل الكويت من المواطنين والمقيمين تم بناؤه بواسطة خدمة الشيخ\مشاري الخراز

تحت اشراف بيت الزكاة دولة الكويت

بالتعاون مع

جماعة انصار السنة المحمدية السريلانكية

2013/05/17 م 1434/07/07 هـ

# பெண்களே!
## உங்களுக்குத்தான்

ஆசிரியர்

அஷ்ஷெய்க் S.H.M. இஸ்மாயில் ஸலபி

உண்மை உதயம் ! இதழாசிரியர்

வெளியீடு

ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா

கண்டி வீதி, பறகஹதெனிய,

கு-வேஉட, இலங்கை.


**புத்தக விபரத் தொகுப்பு**

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | 'பெண்களே! உங்களுக்குத்தான்' |
| ஆசிரியர் | : | அஷ்ஷெய்க் S.S.M. இஸ்மாயில் ஸலபி |
| வெளியீட்டு நாள் | : | 17.05.2013 |
| பிரதிகள் | : | 3000 |
| நூலின் அளவு | : | 1/8 கிரவுன் |
| பக்கங்கள் | : | 128 |
| கணனி வடிவமைப்பு, அட்டைப்படம் | : | M.D.M. அஸ்லம் |
| வெளியீடு | : | ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா, கண்டி வீதி, பறகஹதெனிய. |

**இந்நூல் கிடைக்குமிடம்**

அஸ்ஸலபிய்யா புத்தக நிலையம்,
கண்டி வீதி,
பறகஹதெனிய,
கு-வேஉட,
தொலை. இல: 037 2299423

**விலை : 150/-**

بسم الله الرحمن الرحيم

# முன்னுரை

எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே!

ஸலவாத்தும் ஸலாமும் முஹம்மத்(ﷺ) அவர்கள் மீதும், அவர் காட்டிய வழியில் வாழ்ந்த, வாழும் அனைவர் மீதும் நின்று நிலவட்டுமாக!

பெண்கள் பற்றி இன்று அதிகம் பேசப்படுகின்றது. இது பெண் மீது கொண்ட பற்றினாலோ அல்லது பாசத்தினாலோ உருவான நிலை அல்ல. பெண் அரசியல், பொருளாதாரத் துறையில் புறக்கணிக்க முடியாத சக்தியாக மாறிய பின்னர்தான், அவளது உரிமைப் போராட்டங்களின் பின் ஆண்வர்க்கம் வேண்டா வெறுப்புடன் சில உரிமைகளைக் கொடுத்தது.

மற்றும் சிலர் பெண்ணுரிமை பற்றிப் பேசினர். அவர்கள் பெண்களை அரைகுறை ஆடையுடன் வீதிக்குக் கொண்டு வர வேண்டும், சுதந்திரம் என்ற பெயரில் அவளது கற்பை சூறையாட வேண்டுமென்ற வக்கிர புத்தியில் பெண்ணுரிமை பேசினர்.

இஸ்லாமும் பெண்ணுரிமை பற்றிப் பேசியது. பெண்கள் கொடூரமாக ஒடுக்கப்பட்ட ஒரு கால கட்டத்தில் பெண்கள் போராடாமலேயே இஸ்லாம் பெண்ணின் இயல்புக்கும் குடும்ப வாழ்வுக்கும் பங்கமில்லாத வகையில் அவளுக்கான உரிமைகளைப் பெற்றுக் கொடுத்தது. அதே வேளை, போலிச் சுதந்திரத்தின் பெயரில் அவளது பெண்மை நசுக்கப்படுவதற்கு இஸ்லாம் இடமளிக்கவில்லை.

அந்நிய ஆணுடன் தனித்திருத்தல், அரைகுறை ஆடையுடன் வீட்டை விட்டும் வெளியேறுதல், தகுந்த ஆண் துணையில்லாது தூரப் பயணங்களை மேற்கொள்ளுதல் என பெண்ணுக்கு ஆபத்தை விளைவிக்கக் கூடிய பல விடயங்களை இஸ்லாம் தடுத்தது. இது பெண்ணை அடிமைப்படுத்தும் சட்டங்கள் அல்ல. பெண்ணினத்தைப் பாதுகாப்பதற்கு அவசியமான சட்டங்கள் என்பதை அன்றாடம் நிகழ்ந்து வரும் பாலியல் பலாத்காரங்கள், படுகொலைகள் என்பன உணர்த்தி வருகின்றன.



இதே வேளை பெண்ணின் ஆளுமை வளர்ச்சிக்கான பல வழிகாட்டல்களையும் இஸ்லாம் வழங்கியுள்ளது. இந்த வழிகாட்டல்களில் சில இந்நூலில் முன்வைக்கப்பட்டுள்ளது. நல்ல பண்பாடும், பழக்கவழக்கமும் உள்ள பெண்களால் எதிர்காலச் சந்ததிகள் உரிய முறையில் வழிநடாத்தப்பட்டால் நல்ல சமூக மாற்றத்தைக் காணலாம். இந்த அடிப்படையில் இந்நூலின் இறுதிப் பகுதியில் குழந்தைகளின் ஆளுமை வளர்ச்சிக்கு இஸ்லாம் காட்டும் வழிமுறைகள் சுருக்கமாக பதிவு செய்யப்பட்டுள்ளது.

"பெண்ணே! பெண்ணே!" என்ற தலைப்பில் "உண்மை உதயம்" இஸ்லாமிய மாத இதழில் வெளிவந்த கட்டுரைகளின் தொகுப்பே இந்நூலாகும். ஏறாவூர் பள்ளிவாசல் திறப்பு நிகழ்வில் ஒரு நூல் வெளியீடு செய்தால் நல்லது என ஜமாஅத்தின் கௌரவ செயலாளர் A.L. கலீலுர் ரஹ்மான் (M.A) அவர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க இந்நூல் விரைவாக ஒன்று சேர்க்கப்பட்டது. (அப்பள்ளியின் தோற்றமே அட்டைக்கு அழகு சேர்த்துக் கொண்டிருக்கின்றது.) அவருக்கு எனது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இது எனது 26ஆவது நூலாகும். வழமை போன்று இதனையும் ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னாதில் முஹம்மதிய்யா வெளியிடுகின்றது.

எனவே, ஜமாஅத்திற்கும் பதிப்புரை தந்த அதன் அமீர் அஷ்ஷெய்க் அபூபக்கர் சித்தீக் மதனி அவர்களுக்கும், நூலாக்கத்திற்கு ஊக்கமூட்டி ஆலோசனை வழங்கிய மதிப்பிற்குரிய செயலாளர் அவர்களுக்கும், இந்நூலைக் கணனி வடிவமைத்துத் தந்த சகோதரர்களான M.D.M. அஸ்லம் மற்றும் M.M.M. ரிழ்வான் ஆகியோருக்கும், பிழை திருத்தம் செய்வதில் ஒத்துழைப்பு நல்கிய N.P. ஜுனைத் மதனி மற்றும் A.L. அப்துஸ் ஸலாம் ஆசிரியர் ஆகியோருக்கும், இந்நூலை வாசித்துக் கொண்டிக்கும் உங்களுக்கும் எனது மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

எல்லாம் வல்ல அல்லாஹுதஆலா இந்நூல் மூலம் நற்பயன் பெற நம்மனைவருக்கும் அருள் புரிவானாக!

**அஷ்ஷெய்க் S.H.M. இஸ்மாயில் ஸலபி** **07.05.2013**

بسم الله الرحمن الرحيم

## பதிப்புரை

எல்லாம் வல்ல ஏகவல்லோன் அல்லாஹ் ஒருவனுக்கே அனைத்துப் புகழும்! அல்ஹம்துலில்லாஹ்!

ஸலவாத்தும் ஸலாமும் இறுதித் தூதர் முஹம்மது முஸ்தபா(ﷺ) அவர்கள் மீதும், அன்னாரின் உற்றார் உறவினர்கள், உத்தம ஸஹாபாக்கள், அன்னாரின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வாழ்ந்த, வாழும் அனைவருக்கும் என்றென்றும் உண்டாவதாக!

பெண் என்பவள் சமூகத்தின் கண்ணாவாள் என்பார்கள். ஆதம் நபியைப் படைத்த அல்லாஹ் அவருக்குத் துணையாக ஹவ்வா(அலை) அவர்களையும் படைத்தான். இதிலிருந்து சமூகத்தில் பெண்ணும் சரி பாதியாவாள் என்பதை அறியலாம்.

பெண்களின் உரிமைகளைப் பறித்து அவளை அடிமைப்படுத்தும் சமூகமும் பெண்களின் உணர்வுகளை ஊனப்படுத்தி அவளை சமூக நடவடிக்கைகளிலிருந்தும் ஒதுக்கி வைக்கும் சமூகமும் வெற்றி பெறமுடியாது.

இதே போன்று பெண் இன்று போகப் பொருளாகப் பார்க்கப்படுகின்றாள். வஞ்சகம் கொண்ட ஆணினமும், சுதந்திரம், உரிமை என்ற பெயரில் பெண்களை வேட்டையாட விரும்புகின்றது. ஒழுக்கமும் கட்டுப்பாடும் இல்லாமல் சுதந்திரம், உரிமை என்ற பெயரில் பெண்களைக் கட்டுக்கடங்காமல் வீதியில் இறக்கிவிட்ட சமூகம் வெற்றி பெறாது.

பெண்களின் உரிமைகளும் உணர்வுகளும் மதிக்கப்பட வேண்டும். சமூகத்தில் அவளது கண்ணியமும் அந்தஸ்தும் மட்டுமன்றி கற்பும் உயர்வாக மதிக்கப்பட வேண்டும். அவற்றிற்கு எதிரான அடக்குமுறைகள், வன்கொடுமைகள், வன்முறைகள் முற்றாக ஒழிக்கப்பட வேண்டும். பெண் பண்பாட்டின் சிகரமாகவும், ஒழுக்கத்தினதும் கட்டுப்பாட்டினதும் தாயகமாகவும் திகழ வேண்டும். இத்தகைய ஒரு சமூக சூழலில்தான் ஒளிமயமான எதிர்காலத்தைக் காணலாம்.



எனவே, பெண்கள் ஒழுங்குபடுத்தப்பட வேண்டும். அவர்களிடம் பண்பாட்டுப் பக்குவமும், இஸ்லாமிய ஒழுக்கமும் உருவாக வேண்டும்.

நல்ல பெண்கள் மூலமாக நல்ல சந்ததிகள் உருவாக்கப்படுகின்றனர். நல்ல சந்ததிகள் மூலமாகத்தான் நாளைய சமூகம் உயர்வையும் அந்தஸ்த்தையும் பெற்றுக் கொள்ளும். எனவே, சமூக மாற்றம், சமூக எழுச்சி என்பது பெண்களிடம் ஏற்படுத்தப்படும் மாற்றத்தில்தான் தங்கியுள்ளது. இந்த அடிப்படையில் ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா தனது பிரச்சார நடவடிக்கைகளிலும், நூலாக்க முயற்சிகளிலும் பெண்கள் குறித்து கூடிய கரிசனை காட்டி வருகின்றது.

ஏற்கனவே பெண் இனத்தின் முன்மாதிரிகள், குர்ஆனிய பெண்கள், முதல் நிலை முஸ்லிம் பெண்கள், நற்செய்தி பெற்ற நபித்தோழியர்கள் என பெண்கள் தொடர்பில் பல நூற்களை ஜமாஅத் வெளியிட்டுள்ளது. இதன் தொடரில் “**பெண்களே! உங்களுக்குத்தான்**” என்ற இந்நூலை உங்களுக்கு வழங்குவதில் ஜமாஅத் மகிழ்வடைகின்றது.

எமது ஜமாஅத்தின் அழைப்பாளரும் “உண்மை உதயம்” இஸ்லாமிய மாத இதழாசிரியருமான அஷ்ஷெய்க் S.H.M. இஸ்மாயில் ஸலபி அவர்கள் இந்நூலைத் தொகுத்துள்ளார்கள். அவரது எழுத்துப் பணிகள் தொடரவும், இவர் மூலம் இன்னும் பல நூற்கள் சமூகத்திற்கு வந்து சேரவும் பிரார்த்திக்கின்றேன். எமது ஜமாஅத் சகோதரர்கள் இந்நூலை வாங்கி வாசிப்பதுடன் மக்கள் மன்றத்திற்குக் கொண்டு செல்லவும் முயற்சிக்க வேண்டும்.

எல்லாம் வல்ல அல்லாஹ் இந்நூல் மூலம் பயன்பெறக் கூடிய நன்மக்களாக நம் அனைவரையும் ஆக்கி அருள் புரிவானாக!

**அஷ்ஷெய்க் N.P.M. அபூபக்கர் சித்தீக் மதனி**
**அமீர்**
**ஜமாஅத் அன்ஸாரிஸ் சுன்னதில் முஹம்மதிய்யா**

**06.05.2013**

# பீடிகை

பெண்கள் சமூகத்தின் கண்கள் என்பார்கள். பெண்கள் ஊடாகத்தான் சமூகம் பார்க்கப்படுகின்றது! பெண்கள் மூலம் தான் சமூகம் உருவாக்கப்படுகின்றது! நாளைய சமூகம் எனும் சந்ததிகள் பெண்களால் தான் வளர்த்தெடுக்கப்படுகின்றனர். வார்க்கப்படுகின்றனர். இந்த வகையில் ஒரு பெண்ணில் ஏற்படும் மாற்றம் ஒரு குடும்பத்தில் மாற்றத்தை ஏற்படுத்துகின்றது. ஒரு குடும்பத்தில் ஏற்படுகின்ற மாற்றம் ஒரு சமூக மாற்றமாக மலர்ந்து விரிகின்றது! எனவே பெண்களிடம் ஏற்படுகின்ற மாற்றம் ஆண்களிடம் ஏற்படுகின்ற மாற்றத்தை விட வரவேற்கப்பட வேண்டியதாகும். இந்த அடிப்படையில் இந்நூல் பெண்களைப் பார்த்துப் பேசுகின்றது.

நான் சொல்லப் போகும் குறைகள் ஆண்களிடமும் இருக்கின்றன. எனினும், நான் இங்கு பெண்களைப் பார்த்தே பேசுகின்றேன். இதன் அர்த்தம் பெண்கள் மட்டும் தான் குறையுள்ளவர்கள், குற்றவாளிகள்; ஆண்கள் நிறைவானவர்கள், நிரபராதிகள் என்பது அல்ல.

பொதுவாகப் பேசினால் அதை ஆண்களுக் குரியதாக எடுத்துக் கொள்வதே பெண்களின் இயல்பாகும். இந்த இயல்பும் எண்ணமும் ஆரம்பகால ஸஹாபியாக்களிடமும் இருந்தன. 'குர்ஆன் ஆண்களைப் பற்றி மட்டும் பேசுகின்றதே! பெண்கள் குறித்து பேசவில்லையே!' என அவர்கள் கேள்வி எழுப்பினர்.

இந்த அடிப்படையில்தான் பெண்களைப் பார்த்து இந்த விடயங்கள் பேசப்படுகின்றன.





# அறுவை வேண்டாம்

மனிதர்களில் சிலர் சரியான அறுவைப் பாட்டியாக இருப்பர். பேசிக் கொண்டே இருப்பர். இந்தப் பேச்சு வெறுப்பேற்றுவதாகக்கூட இருக்கும். இத்தகைய இயல்புடையோர் பெண்களிலும் இருக்கின்றனர்.

ஒரே விடயத்தை ஒரே நபரிடம் ஒன்பது தரம் பேசுவர். அதன் பிறகும் பேசத் தயாராக இருப்பர். ஆனால் பாவம்! கேட்பவர்கள் பாடோ படுதிண்டாட்டம்தான்.

சலிப்போ, களைப்போ இல்லாமல் கதைத்துக் கொண்டிருப்பர். சிலருக்கு வீட்டில் வேலையிருக்காது. ஓய்வு நேரத்தைக் கழிப்பதற்காக அடுத்த வீட்டிற்குப் போய் அறுக்க ஆரம்பிப்பர். இவளுக்கு வேலையில்லாமல் பேசிக் கொண்டிருப்பாள். அவளுக்கும் வேலையில்லாமல் இருக்குமா? அல்லது இவளது பொழுதைப் போக்கும் விளையாட்டுப் பொருளாக அவள் மாற முடியுமா? சலித்துப் போவார்கள்.

சிலர் தாங்க முடியாத நிலையில் "சரியான வேலை, வொஷின் மெஷினில் போட்ட துணியெல்லாம் அப்படியே இருக்கின்றது" என நாசுக்காக கதையைக் "கட்"பண்ணப் பார்ப்பார்கள். ஆனால் அறுவைப் பாட்டியோ விடுவதாக இல்லை. "ஒரே வேல வேலண்டு செஞ்சுக்கிட்டிருக்க மனிஷன் என்ன மெஷினா? கொஞ்சம் ரெஸ்டா இருங்கள்!" என அட்வைஸ் பண்ணிவிட்டு மீண்டும் ஆரம்பித்துவிடுவர் அறுவைப் பணியை. இந்தப்

பழக்கம் உங்களிடம் இருந்தால், இந்தப் பழக்கத்தில் சிறிதளவாவது உங்களிடம் இருந்தால் அதை நிறுத்திக் கொள்ளுங்கள். இப்படி அடுத்த மனிதனின் கஷ்ட நஷ்டங்களை அறியாமல் அறுத்துத் தள்ளுபவர்களை யாருக்கும் பிடிக்காது. சரியான அறுவைப்பாட்டி என வெருண்டு ஓட ஆரம்பித்துவிடுவர்.

எனவே நீங்கள் யாருடனாவது நேரத்தைப் போக்குவதற்காகக் கதைக்க விரும்பினால் அவர்களது நேரமும் பொருத்தமாக இருக்கின்றதா என ஒரு கணம் சிந்தித்துப் பாருங்கள். மேலும் பேச்சை நீட்டிக் கொண்டிருக்காதீர்கள். காலம் பொன்னானது. நீங்கள் உங்கள் நேரத்தை வீணாக்குவதே தவறு எனும் போது அடுத்தவர்களது நேரத்தை வீணாக்குவது எவ்வளவு பெரிய குற்றம் என்பதை எண்ணிப் பாருங்கள்.

யாருடனாவது எதையாவது பேச வேண்டும் என்றிருந்தால் சமயம், சந்தர்ப்பம் பார்த்துப் பேசுங்கள். ஒருவரிடம் ஒரு விடயத்தைப் பலதடவை திரும்பத் திரும்பக் கூறாதீர்கள். அவர் உங்களைத் தவறாக எடைபோடுவார். ஒன்றுமே விளங்காத மக்கு என அவரை நீங்கள் தவறாக எடைபோட்டுவிட்டதாகவும் அவர் நினைப்பார். அதனால்தான் ஒரே விடயத்தை திரும்பத் திரும்பக் கூறுவதாக எண்ணுவார். இது அவருக்கு கௌரவக் குறைவை உண்டுபண்ணும்.

எனவே, அளவோடு பேசுங்கள். 'அதிகம் பேசுவதால் அந்தஸ்து குறைந்துவிடும். குற்றங்களும், பொய்யும் கூடிவிடும்' என்பது ஒரு அரபுப் பழமொழியாகும். அதிகம் கதைத்து உங்கள் அந்தஸ்தை நீங்களே குறைத்துக் கொள்ளாதீர்கள். அதிகம் கதைக்கும்



இயல்புள்ளவர்கள் பேசுவதற்கு செய்தி இல்லை எனும் போது ஒன்றைப் பேசியதையே திரும்பத் திரும்பத் பேசுவர். அல்லது தனது காதில் விழுந்ததையெல்லாம் பேச ஆரம்பிப்பர்.

**"தான் கேட்டதையெல்லாம் பேசுவதே ஒருவர் பொய்யனாக இருக்கப் போதுமானதாகும்' என நபி(ﷺ) அவர்கள் கூறியுள்ளார்கள்."**

(முஸ்லிம்)

எனவே, கேட்டதையெல்லாம் பேசி பொய்யன் லிஸ்டில் இடம்பிடித்துவிடாதீர்கள்.

அடுத்து, பேசிப் பழகியவர்களுக்குப் பேசாமல் இருக்க முடியாது. எனவே அடுத்தவர்கள் விடயத்தில் அவசியமில்லாமல் மூக்கை நுழைத்து அவர்கள் செய்திகளைச் சேகரிப்பர். அதைக் கொஞ்சம் கூட்டிக் குறைத்து அவிழ்த்துவிடுவர். இதன் மூலம் புறம், பொய், அவதூறு, அடுத்தவர்களின் குறைகளைத் தேடுதல், மேலும் தனக்குச் சம்பந்தமில்லாத விடயத்தில் தலையிடுதல் எனப் பல தவறுகளில் விழ நேரிடும்.

எனவே அளவோடு பேசுங்கள்; தேவையானதை மட்டும் பேசுங்கள்.

**"யார் அல்லாஹ்வையும் மறுமையையும் நம்புகின்றாரோ அவர் பேசினால் நல்லதைப் பேசட்டும். அல்லது வாய் மூடி மௌனமாக இருந்து விடட்டும்' என நபி(ﷺ) அவர்கள் கூறியுள்ளார்கள்."**

எனவே நல்லதை மட்டும் பேசுங்கள்.

நீங்கள் பேசும் ஒவ்வொரு பேச்சும் மலக்குகளால் பதியப்படுகிறது என்பதைக் கவனத்திற் கொள்ளுங்கள்.

நீங்கள் அதிகம் பேசுபவராக இருந்தால் உங்களுக்கு அறுவைப்பாட்டி "அபுல் கலாம்" (பேச்சின் தந்தை) என்றெல்லாம் பட்டம் சுமத்தி உங்களை விட்டும் மக்கள் வெருண்டு செல்வார்கள். மக்கள் மட்டுமல்ல நபி(ﷺ) அவர்களும் உங்களை விட்டும் ஒதுங்கிவிடுவார்கள் என்பதாகப் பின்வரும் ஹதீஸ் கூறுகின்றது.

**"உங்களில் எனக்கு மிகவும் வெறுப்பானவரும் மறுமையில் எனக்கு மிகவும் தூரமானவரும் யாரெனில் அதிகம் பேசுபவர், அடுத்தவரை இழிவுபடுத்தும் விதத்தில் பேச்சை நீட்டுபவர், தன்னைப் பற்றிப் பெருமை பேசுபவராவார்' என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்."**

*(அறிவிப்பவர்: ஜாபிர்(رضي الله عنه))*
*ஆதாரம்: திர்மிதி (2018)*

நீங்கள் அதிகம் பேசுபவராக இருந்தால் நீங்கள் நபியின் வெறுப்புக்குரியவராவீர்கள். நீங்கள் அதிகம் பேசுபவராக இருந்தால் மறுமையில் நபிக்கு மிகவும் தூரமாக இருப்பீர்கள்.

உங்களது அதிகரித்த பேச்சால் நட்புக்களை இழந்திருப்பீர்கள். கணவனின் அன்பை இழந்திருப்பீர்கள்; இதுகூடப் பரவாயில்லை என்று கூறலாம். நபியின் வெறுப்பையும் அவரது நெருக்கத்தையும் கூட இழக்க நேரிடுகின்றதே! இதைத் தாங்கிக் கொள்ள முடியுமா?

எனவே, அளவோடு பேசுங்கள். உங்களுக்கு ஓய்வு



இருக்கலாம். அதே நேரம் அடுத்தவருக்கு வேலை இருக்கலாம். இதைப்பற்றி கொஞ்சம் சிந்தித்துப் பேசுங்கள். அடுத்தவர்களுடன் உரையாடப் பொருத்தமான சந்தர்ப்பத்தை அறிந்து பேசுங்கள். தொலைபேசியூடாகத் தொடர்பு கொள்வதாக இருந்தாலும் அந்த நேரம் பொருத்தம்தானா என்பதை அறிந்து பேசுங்கள்.

உங்களது பேச்சு குறைவாக, அளவாக சந்தர்ப்பத்திற்கு அமைவாக இருந்தால் கேட்கப்படும். பேச்சு கூடக்கூட கேட்க வேண்டும் என்ற ஆர்வம் அடிபட்டுப் போய் எப்படா முடியும் என்ற எண்ணம் தான் எழும். எனவே அளவோடு பேசி அனைவரின் அன்பையும் நட்பையும் பெறும் பெண்ணாக நீங்கள் மாற முயற்சி செய்யுங்கள்!.....

*(இதை நாலுவரியில் நறுக்கென்று சொல்லாமல் இவ்வளவு நேரம் இவர் அறுத்துவிட்டாரே! என என்னுடன் கோபமா? தயவு செய்து மன்னிக்கவும்.)*





# வீண்விரயம் வேண்டாம்

பெண் குடும்பத் தலைவி என்றும், இல்லத்தரசி என்றும் அழைக்கப்படுகின்றாள். வீட்டுக்கு அவள்தான் அரசியாம்! குடும்பத்துக்கு அவள்தான் தலைவியாம்! இல்லத்துக்கு அரசியாக இருப்பவள் பொறுப்பில்லாமல் செலவு செய்து கஜானாவைக் காலி பண்ணுபவளாக இருந்தால் நிலைமை என்னவாகும் என்று சிந்தித்துப் பாருங்கள்! குடும்பம் நடு வீதிக்கு வந்து விடுமல்லவா!

சில பெண்களின் கையில் காசு கிடைத்து விட்டால் அவர்களுக்குத் தலை-கால் விளங்காமல் போய் விடுகின்றது. பக்கத்து வீட்டு பாத்திமாவுக்கும், அடுத்த வீட்டு ஆயிஷாவுக்கும் கலர்ஸ் காட்டுவதற்காகப் பணத்தை நீர் போல் செலவு செய்கின்றனர். ஈற்றில் வீண் விரயத்தாலும், போலி ஆடம்பரத்தாலும் நடு வீதிக்கு வந்து நிற்கும் நிர்ப்பந்த நிலைக்கு ஆளாகின்றனர்.

“நான் போட்டிருக்கும் செருப்பு ஐயாயிரம் ரூபாய்!” எனப் பெருமைகொள்கின்றனர். வலது காலுக்குக் கீழே 2500 ரூபாவும், இடது காலுக்குக் கீழே 2500 ரூபாவும் இருந்தால் நடப்பது இலகுவாகப் போகின்றதா?

“தேவையில்லாததை வாங்குபவன் அவசிய மானதை விற்பான்!” என்பார்கள். ஆடம்பரத்துக்காகவும், வீண்விரயத்துக்காகவும் தேவையற்ற பொருட்களை வாங்கி காணி-வீட்டை விற்றவர்கள் எவ்வளவு பேர் இருக்கின்றனர்!?



எனவே முதலில் வாழ்க்கையைப் புரிந்துகொள்ள வேண்டும். எமக்குத் தேவையான பொருட்கள் எவை? அவசியமானவை எவை? அத்தியவசியமானவை எவையென்ற தெளிவு இருக்க வேண்டும். அவற்றின் முக்கியத்துவத்துக்கு ஏற்பவே அவற்றை வாங்குவதில் முதன்மையளிக்க வேண்டும். இதில் தவறு விடும் போது வீணாகக் கடன் தொல்லைக்கும், அவமானத்துக்கும் ஆளாக நேரிடும். எனவே வீண் விரயத்தைத் தவிர்ப்பது இல்லத்தரசிகளுக்கு அவசியமான பண்பாகும்.

இன்று அதிகமான ஆண்கள் வெளிநாட்டில் பணி செய்கின்றனர். பணத்தை மனைவிக்கு அனுப்புகின்றனர். விடுமுறையில் வீடு வரும் கணவர்கள் தாம் மீண்டும் வெளிநாடு செல்ல வேண்டிய அவசியத்தை உணர்கின்றனர். பணத்தைப் பயன்படுத்தும் அதிகாரம் முழுமையாகப் பெண்கள் கையில் வந்ததும் அவர்கள் ஆடம்பரத்துக்காகவும், அடுத்தவருக்குக் காட்டுவதற் காகவும் வீண் செலவுகளைச் செய்து கணவனைக் கண் காணாத நாட்டிலேயே வாழ வைக்கின்றனர்.

பெண்ணே பெண்ணே! கண்ணே கண்ணே! கண் போன்ற உன் கணவனுடன் வாழ்வதை விட காசுடன் வாழ்க்கை நடத்துவதுதான் உனக்கு விருப்பமா?

வெளி நாட்டில் பணி புரியும் ஒரு நல்ல மனிதரைக் குவைட்டில் சந்தித்தேன். அவர் 16 வருடங்களாக வெளி நாட்டில் பணி புரிவதாகக் கூறினார். குடும்பத்துடன் வாழ்வதுதான் சிறந்த வாழ்க்கை. “உங்களுக்குக் குடும்பத்துடன் வாழும் ஆசை இல்லையா?” என்று நான் வினவிய போது அவரது கண்கள் கலங்கின. “அவ புரிஞ்சிக்க மாட்டேங்கிறா ஹஸரத்!” என அவர் கூறிய போது, எனது உள்ளம் உடைந்து சுக்குநூறாகியது. பேச்சோடு பேச்சாக “ஈராக் ஜனாதிபதி சதாமுக்கு

அல்லாஹ் அருள் புரிய வேண்டும்! அவர் குவைட்டைக் கைப்பற்றிய போது ஊருக்குப் போனேன்! அந்த நேரத்தில் எனக்கொரு பெண் குழந்தை கிடைத்தது!" என்று கூறினார்.

அது மட்டுமன்றி மனைவி அதிகம் செலவளித்துப் பழகி விட்டதாகவும், தான் ஊருக்குச் சென்றால் தன்னால் அவளது செலவுக்கு ஏற்ப சம்பாதிக்க முடியாதென்றும் கூறினார்.

ஊதாரியான ஒரு மனைவியால் பாலைவன பூமியில் வெந்து வெதும்பி நொந்து நூலாகிக் காய்ந்து கருவாடாகித் தவிக்கும் ஒரு ஆணின் கண்ணீர்க் கதை மட்டுமல்ல இது! வெளிநாட்டில் பணி புரியும் பாதிப்பேரின் நிலை இதுதான்.

பெண்களே!

இந்தக் கொடுமைக்கு அல்லாஹ்விடம் நீங்கள் கூறப் போகும் பதிலென்ன? "முடிந்ததை உழைத்துத் தாருங்கள்! என்னால், "முடிந்த மட்டும் சிக்கனமாகச் செலவு செய்கின்றேன்! வறுமையுடன் வாழ்ந்தாலும் உங்களைப் பிரிந்து என்னால் வாழ முடியாது!" என்று கூற வேண்டிய பெண்கள், தமது வீண் விரயத்துக்காகக் கணவரைத் தூரத் தேசங்களுக்குத் துரத்துகின்றனர்.

வீண் விரயமென்றால் தேவைக்கு அதிகமாகச் செலவு செய்தல் என்று கூறலாம். இந்த வகையில் பெண்களாகிய உங்களிடம் பல அம்சங்களில் வீண் விரயம் குடிகொள்கின்றது. உங்கள் உடையில் வீண் விரயம் ஏற்படுகின்றது. கலர்-கலராக ஆடை வேண்டுமென்ற ஆசையைக் களையுங்கள்! சிக்கனமாகக் குறைந்த செலவில் ஆடைகளைத் தெரிவு செய்யுங்கள்! ஆடை விடயத்தில் செலவைக் குறைக்க வழி செய்யும்



ஒரே மார்க்கம் இஸ்லாம்தான். சாதாரணமாக ஆயிரம் ரூபா அபாயாவுடன் உங்கள் ஆடைச் செலவைக் குறைத்துக்கொள்ளலாம். இந்த வசதி வேறு எந்தக் கலாசாரத்தைப் பின்பற்றும் பெண்களும் அடைய முடியாதது. எனவே சிக்கனமான ஆடையைத் தெரிவு செய்யுங்கள்! அளவுக்கதிகமான ஆடைகளுக்கு ஆசைப்படாதீர்கள்!

அணிகலன் விடயத்திலும் வீண்விரயம் ஏற்படுகின்றது. பெண்களுக்கு ஆபரணங்களில் ஆசை வருவது இயல்புதான். இந்த ஆசையை அத்தியாவசியத் தேவைகள் முடிந்த பின்னர் பணம் மிச்சமிருந்தால் நிறைவேற்றலாம். இஸ்லாம் ஹிஜாப் முறையை வலியுறுத்துவதால் நகையணிந்து பிறருக்குக் காட்டித் திரிய அனுமதியில்லை. இந்த வகையில் முஸ்லிம் பெண்களுக்கு அதிக நகைச் செலவு வருவதற்கும் வழியில்லை. அதிகமாக நகையணிந்து வீதியில் வலம் வந்து கொள்ளையரினதும், திருடர்களின் தாக்குதல் களுக்குள்ளாகவும் தேவையில்லை. பல பெண்களின் உயிருக்கு அவர்கள் அணிந்திருக்கும் நகைகளே உலை வைத்திருக்கின்றன என்பது கவனத்திற்கொள்ளத் தக்கதாகும். எனவே, அதிக நகைகளைத் தவிருங்கள்!

சில பெண்கள் பவ்டர், க்ரீம் எனக் காசைக் கரைக்கின்றனர். கொஞ்சம் நாகரிக மோகம் தலைக்கேறி விட்டால் சிகையலங்காரம், பியூடி பாலர் என என்னென்னவோ செய்து செலவு செய்து கணவன் வெயிலில் வெந்து வியர்வை சிந்தி அனுப்பும் பணத்தைப் பாழாக்குகின்றனர். இவ்வகையில் அலங்காரத்தின் பெயரிலும் வீண் விரயம் செய்கின்றனர்.

ஆடம்பரமான அவசியமற்ற விருந்துகள் மூலமும் வீண் விரயம் ஏற்படுகின்றது. சில பெண்கள் விருந்துகள்

மூலமாகப் பெருமையடிக்க முற்படுகின்றனர். எனவே, பிறந்த தினம், பூப்பெய்திய திருவிழா என இல்லாத விருந்துகளை உண்டாக்கிக் கொள்கின்றனர். 50 பேருக்கு அழைப்பென்றால் 100 பேருக்குச் சமைத்து, அதிலும் வீண் விரயத்தைச் செய்கின்றனர். எனவே அர்த்தமற்ற ஆடம்பர விருந்துகளைத் தவிருங்கள்!

சிலருக்குக் கையிலே காசு கிடைத்தால் ஏதாவது செலவு தேடி வரும். வீட்டின் முன் ஹோல் சரியில்லை! அதை உடைக்க வேண்டும்!", "பின் வாசல் சரியில்லை! அதைச் சரி செய்ய வேண்டும்! என உடைப்பதும் கட்டுவதுமாக இருப்பர். கட்டி முடிப்பதற்கிடையில் கணவன் கட்டிலில் படுக்கும் நிலைக்கு வந்து விடுவான்.

இவ்வாறு வீண் விரயம் எந்த ரூபத்தில் வந்தாலும் அது மார்க்கத்தில் ஹராமாகும் என்பதைப் பெண்கள் புரிய வேண்டும். உங்களது கணவன் செலவுக்குத் தரும் பணத்திலும் முடிந்த வரை சிக்கனமாகச் செலவு செய்து சேமிக்கப் பழகுங்கள்! வாழ்க்கையில் நெருக்கடிகள் வரும் போது அந்தச் சேமிப்பு உங்களுக்கு உதவியாகவும் இருக்கும். கணவனிடம் உங்கள் அந்தஸ்தையும் உயர்த்தும்.

வீண் விரயத்தினால் ஏற்படும் பாதிப்புகளை அறிந்து தெளிவு பெறுங்கள்!

**"நிச்சயமாக வீண் விரயம் செய்வோர் ஷைத்தானின் சகோதரர்களாகவே இருக்கின்றனர். ஷைத்தான் தனது இரட்சகனுக்கு நன்றி கெட்டவனாகவே இருக்கின்றான்."**

(17:27)

வீண் விரயம் செய்வோரை அல்லாஹ் நேசிக்க மாட்டான். அல்லாஹ்வின் நேசம் உங்களுக்கு



வேண்டாமா? வீண் விரயம் செய்வோர் ஷைத்தானின் சகோதரர்களாவர். நீங்கள் ஷைத்தானின் சகோதரிகளாக இருப்பதில் சந்தோஷப்படுகின்றீர்களா?

வீண் விரயம் உங்களது செல்வங்களையும், உழைப்பையும் விழுங்கி ஏப்பம் விடுகின்றது. இதனால் வெகு விரைவிலேயே உங்களை வறுமை வாரி அணைத்துக்கொள்ளும். இந்த வறுமையை நீங்கள் அஞ்ச வேண்டாமா?

பணம் இல்லாமல் போனாலும், உங்களிடம் வீண் விரயம் காரணமாக ஏற்பட்ட ஆடம்பர மனம் இல்லாமல் போகாது. எனவே காசிருக்கும் போது வீசிச் செலவு செய்தது போலவே செலவு செய்ய ஆரம்பிப்பீர்கள். இதனால் இருக்கும் பொருட்களை விற்கவும், அடுத்தவர்களிடம் கடன் பெறவும், கடன் பெற முடியாத போது தவறான வழியில் பொருளீட்டவும் முற்படுவீர்கள். இதன் பின் உருட்டும் புரட்டுமாக உங்கள் வாழ்வு மாறி விடும். வீண் விரயம் என்பது எல்லா வகையான தீமைகளையும் கொண்டு வரும் என்பதால்தான் வீண் விரயம் செய்வோர் ஷைத்தானின் சகோதரர்கள் எனக் குர்ஆன் கூறுகின்றது.

எனவே பெண்களே!
வீண் விரயத்தைத் தவிருங்கள்!
சிக்கனமாக வாழப் பழகுங்கள்!

உங்கள் பெண் மக்களிடமும் சிக்கன குணத்தை ஏற்படுத்துங்கள்! வரவறிந்து செலவு செய்யும் பக்குவம் பெண்ணுக்கு அழகாகும்! இந்த அழகு உங்களை விட்டும் அகலாது இருக்கட்டும்!





# கஞ்சத்தனம் வேண்டாம்

செல்வத்தின் சிறப்பை அறியாமல் சிலர் வீண்விரயம் செய்கின்றனர். காசை நீராகக் கரைக்கின்றனர். ஈற்றில் இருந்ததையெல்லாம் இழந்து வெம்புகின்றனர். இதற்கு நேர்மாற்றமாக மற்றும் சிலர் கஞ்சத்தனம் எனும் நோயால் பாதிக்கப்பட்டுள்ளனர். பணத்தைச் சேர்த்து வைத்து எண்ணி எண்ணிப் பார்ப்பதில் இவர்களுக்கு அலாதிப் பிரியம். அவசியத் தேவைக்குக் கூட செலவழிக்கமாட்டார்கள். இவர்களில் பலரின் நடவடிக்கை மிகவும் வித்தியாசமானது.

சிலர் உண்ணவும் பருகவும் கூட பஞ்சம் பாடுவர். மாலை நேரமானதும் ஏதாவது ஒரு வீட்டிற்குச் சென்று கதை கொடுப்பர். தேநீர் குடித்து முடிந்த கையோடு "உங்களுக்கும் வேலையிருக்கும்; அப்ப நான் வாரனே" என்று கிளம்புவர்! இவர்கள் கதை கொடுப்பதே தேநீருக்குத்தான் என்பது போல் இருக்கும். இவர்களது வீட்டுக்கு யாரும் சென்றால் ஒரு பிளேண்டியுடன் சமாளித்துவிடப்பார்ப்பார்கள்.

மற்றும் சிலர் எப்பவும் பக்கத்து வீட்டாரிடம் சீனி கொஞ்சம் இருக்குமா? கொச்சிக்காய் தூள் கொஞ்சம் இருக்குமா? பால்மா ஒரு கப் கிடைக்குமா? என்று அடுத்த வீட்டுப் பொருட்கள் மூலமே அடுக்களை வேலைகளை முடிப்பர். வாங்கிய பொருட்களை மீள ஒப்படைக்க மாட்டார்கள்.



அடுத்த வீட்டில் இரவல் பெருவது குற்றம் அல்ல. நபி(ﷺ) அவர்கள் மரணித்த அன்று இரவு விளக்கு ஏற்றுவதற்கு அவர்களது வீட்டில் எண்ணெய் இருக்கவில்லை. "பக்கத்து வீட்டில் இரவல் பெற்றே விளக்கு ஏற்றப்பட்டது. பக்கத்து வீட்டில் இரவல் பெற்றால், பெற்றதை விட சற்று அதிகமாகக் கொடுப்பது கண்ணியமான வழிமுறை" என நபி(ﷺ) அவர்கள் கூறியுள்ளார்கள்.

சில பெண்கள் வீட்டு உபகரணங்களை இரவல் கேட்பது போன்றே "உங்கட நெக்லஸைக் கொஞ்சம் தாங்க, உங்கட தங்கச் சங்கிலியைக் கொஞ்சம் தாங்க" என்றும் இரவல் கேட்பர்! இதைத் தவிர்க்க வேண்டும். அவசியத் தேவைகளை மட்டுமே அடுத்தவர்களிடம் இரவல் கேட்க வேண்டும். எடுத்தால் எடுத்தது போல் திருப்பிக் கொடுக்க வேண்டும். சிலர் ஐம்பது, நூறு என சின்னச் சின்ன கடன்களை எடுத்து "அல்வா" கொடுப்பதையே வழக்கமாகக் கொண்டிருப்பர். இதற்கெல்லாம் உள்ளத்தில் ஊறிப் போன கஞ்சத்தனம் தான் காரணமாக இருக்கும்.

**"(நல்லறங்களில்) செலவு செய்யுங்கள். (அது) உங்களுக்கு சிறந்ததாகும். எவர்கள் தமது உள்ளத்தின் கஞ்சத்தனத்திலிருந்து பாதுகாக்கப் படுகிறார்களோ அவர்கள் தாம் வெற்றியாளர்கள்."**

*(64:16)*

கஞ்சத்தனத்திலிருந்து உள்ளம் பாதுகாப்புப் பெற்றால் அதுதான் வெற்றிக்கு வழியாக இருக்கும் என இந்த வசனம் கூறுகின்றது.

செல்வத்தைச் சேர்த்து வைத்து செலவு

*செய்யாமல் கஞ்சத்தனம் காட்டுவது நல்லதல்ல என அல்லாஹ் கூறுகின்றான்.*

**"அல்லாஹ் தனது அருட்கொடையிலிருந்து அவர்களுக்கு வழங்கியவற்றில் கஞ்சத்தனம் செய்வோர் அது தங்களுக்கு நல்லது என்று எண்ண வேண்டாம். மாறாக, அது அவர்களுக்குத் தீயதே! எதை அவர்கள் கஞ்சத்தனம் செய்கிறார்களோ அவை மறுமை நாளில் அவர்களது கழுத்தில் வளையங்களாகப் போடப்படும். வானங்கள், பூமி ஆகியவற்றின் உரிமை அல்லாஹ்வுக்கே உரியதாகும். நீங்கள் செய்பவை பற்றி அல்லாஹ் நன்கறிந்தவனாவான்"** *என்று கூறுகின்றது.*

*(3:180)*

*பின்வரும் வசனம், கஞ்சத்தனம் காட்டுவதுடன் பிறரையும் கஞ்சத்தனம் பண்ணுமாறு ஏவுவார்கள் என்பதை விளக்குகிறது. அத்துடன், செல்வம் இருந்தும் இல்லாதது போல் நடிப்பர். ஒழுங்காக உடுக்காமல், உண்ணாமல் எப்போதும் பஞ்சப் பாட்டுப் பாடிக் கொண்டிருப்பர். இவர்கள் இழிவான வேதனைக் குரியவர்கள் ஆவர்.*

**"அவர்கள் கஞ்சத்தனம் செய்து, (பிற) மக்களையும் கஞ்சத்தனம் செய்யத் தூண்டு கின்றனர். மேலும், அல்லாஹ் தனது அருட்கொடையிலிருந்து அவர்களுக்கு வழங்கியதை மறைக்கின்றனர். நிராகரிப்பாளருக்கு இழிவுதரும் வேதனையை நாம் தயார்செய்து வைத்துள்ளோம்"**

*(4:37)*

*இவர்கள் கொடுக்காமல் இருப்பதால் அல்லாஹ்வுக்கு எந்தக் குறையும் இல்லை. இவர்களின் செல்வம் அல்லாஹ்வுக்குத் தேவையில்லை என்பது போல் அல்லாஹ் பேசுகின்றான்.*



**"இவர்கள் தாமும் கஞ்சத்தனம் செய்து, மனிதர்களுக்கும் கஞ்சத்தனத்தை ஏவுகின்றனர். யார் புறக்கணிக்கின்றாரோ நிச்சயமாக அல்லாஹ் (அவர்களை விட்டும்) தேவையற்றவன்; புகழுக்குரியவன்"**

*(57:24)*

இவ்வாறு பல வசனங்கள் கஞ்சத்தனத்தைக் கண்டித்துப் பேசுகின்றன! பெண்களில் சிலரிடம் அடிப்படைத் தேவைக்கே செலவு செய்யாத கஞ்சத்தனம் இருக்கின்றது. மற்றும் சிலர் அடிப்படைச் செலவுகளை உரிய முறையில் செய்தாலும், அடுத்தவர் விடயத்தில் இந்தக் கஞ்சத்தனப் போக்கைக் கைக்கொள்வர்.

குடும்ப உறவினர்களுக்கு செலவு செய்ய முற்படமாட்டார்கள். கணவன் தன் குடும்பத்தினருக்குச் செய்யும் செலவுகளில் கூட சில மனைவியர் தலையீடு செய்வர்.

தாய்க்கு இவ்வளவு கொடுக்க வேண்டுமா? சகோதரிக்கு இப்படிச் செய்ய வேண்டுமா? அவளுக்கு கணவன் இல்லையா? எனக் கேட்டு கணவனை நச்சரித்துக் கொண்டே இருப்பர். இதுவும் தவறாகும்.

மற்றும் சிலர் சின்னச் சின்ன தர்மங்கள் கூட செய்யமாட்டார்கள். கணவன் செய்யும் தர்மத்திற்கும் தடையாக இருப்பார்கள். இத்தகைய எல்லா வகையான கஞ்சத்தனங்களிலிருந்தும் உள்ளத்தைக் காக்க வேண்டும். எனவே தான் நபி(ﷺ) அவர்கள் அடிக்கடி,

**"யா அல்லாஹ்! கஞ்சத்தனம், சோம்பல், தள்ளாடும் வயதுவரை வாழ்தல், கப்ரின் வேதனை, தஜ்ஜாலின் பித்னா, வாழ்வு மற்றும் மரணத்தின் சோதனைகளை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். என பிரார்த்திப்பவர்களாக**

**இருந்தார்கள்.”**

அறிவிப்பவர்: அனஸ் இப்னு மாலிக்(ﷺ)
புஹாரி: 4707

மற்றும் சில அறிவிப்புக்களில்,

**“யா அல்லாஹ்! கஞ்சத்தனத்தை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்’ என பிரார்த்தித் துள்ளார்கள்.”**

அறிவிப்பவர்: ஸஹ்த் இப்னு அபீ வக்காஸ்(ﷺ)
புஹாரி: 6370

எனவே, கஞ்சத்தனத்தை விட்டும் அடிக்கடி அல்லாஹ்விடம் பாதுகாவல் தேட வேண்டும். கஞ்சனுடைய காசை வைத்தியனும் கள்வனும் கொண்டு செல்வான் என்று சொல்வார்கள். வாழ்க்கைக்குத் தேவையான செலவுகளைச் செய்தல், அடுத்தவர்களிடம் உதவி தேடுவதை முடியுமானவரை தவிர்த்தல், பிறரிடம் தேவையற்றிருத்தல், குடும்ப உறவினர்களுக்கும் அண்டை அயலவர்களுக்கும் உதவுதல், முடிந்தவரை தர்மங்கள் செய்தல் போன்ற பண்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். செல்வத்தை சேர்த்து வைத்து செலவு செய்யாமல் விட்டுச் சென்று பின்னர் பிள்ளைகளுக்கு அதுவே பித்னாவாக மாறிவிடாதிருக்க வேண்டும்.

எனவே, பெண்ணே! பெண்ணே! கண்ணே! கண்ணே! கஞ்சத்தனம் வேண்டாம் கண்ணே!.....







# பதற்றம் வேண்டாம்

சின்ன சிக்கல் ஏற்பட்டாலும் அதிகம் அலட்டிக் கொள்பவர்களாகவும், பதட்டம் கொள்பவர்களாகவும் பல பெண்கள் காணப்படுகின்றனர். பதட்டம் சில பெண்களுடன் கூடப்பிறந்த குணமாகக் குடிகொண்டிருக்கும். வாழ்வில் இறக்கங்கள் ஏற்பட்டாலோ இழப்புக்களைச் சந்திக்க நேரிட்டாலோ வாழ்வே சூனியமாகிவிட்டது போன்று நடந்து கொள்வர், ஒப்பாரி வைப்பர், கன்னத்திலும் மார்பிலும் அடித்துக் கொள்வர், படபட எனப் பொரிந்து தள்ளுவர். உலகில் எவருக்கும் ஏற்படாத இழப்பு தனக்கு ஏற்பட்டது போன்று நடந்து கொள்வர்.

சில பெண்கள் அல்லாஹ்வையே குறைகூறுவர். அல்லாஹ்வுக்கு கண் இல்லையா? என்று கேட்பர். சோதிக்க வேண்டும், ஆனால் இப்படிச் சோதிக்கக் கூடாது என அல்லாஹ்வுக்கே போதிக்க ஆரம்பித்து விடுவர். பொறுமையும், கழாகத்ர் பற்றிய நம்பிக்கையும் உள்ள எந்த மனிதனும் இந்த நிலையை அடையமாட்டான்.

சிலர் ஏற்பட்ட சின்ன தோல்வி, இழப்பு, போன்றவற்றை எண்ணி அடுத்த கட்டம் என்ன என்ற முடிவு இல்லாமல் தற்கொலைக்குக் கூட சென்றுவிடுகின்றனர். இவர்களது உள்ளம் சவால்களைச் சந்திக்கத் தயங்குகின்றது. இழப்புக்களைத் தாங்க மறுக்கின்றது. பரீட்சையில் தோல்வி என்பதற்காகவும், காதலில் தோல்வி என்பதற்காகவும் தற்கொலை செய்து கொள்கின்றனர்.

பரீட்சை என்பது வாழ்க்கைக்காக. வாழ்க்கையே பரீட்சைக்காக அல்ல என்பதை இவர்கள் உணர மறுக்கின்றனர். காதலன் ஏமாற்றிவிட்டான் என்பதற்காகப் பல பெண்கள் தன்னைத் தானே மாய்த்துக் கொள்வது எவ்வளவு முட்டாள்தனமானது? மாமியார்-மாப்பிள்ளை கொடுமை போன்ற பல பிரச்சினைகளுக்கும் சிலருக்கு தற்கொலை தீர்வாகின்றது. கணவன் அடித்து விட்டான் என்பதற்காக நெருப்பில் எத்தனை பெண்கள் எரிந்து செத்துள்ளனர். ஈமான் இன்மையும், கழாகத்ரை ஏற்றுக் கொள்ளும் பக்குவமின்மையும், பொறுமையின்மையும், பதற்றம் மற்றும் அவசர புத்தி போன்ற கெட்ட குணங்களும் தான் இத்தகைய இழிவான முடிவுகளின் பால் தள்ளுகின்றன.

அவசரம் ஷைத்தானின் நின்றுமுள்ளது என்பது நபிமொழியாகும். ஷைத்தான் நல்ல முடிவின்பால் மனிதனை இட்டுச் செல்ல மாட்டான். அவ்வாறே எமது வாழ்வில் நிதானம் தேவை அவசரம், பதற்றம் தவிர்க்கப்பட வேண்டும்.

**“யாருடைய உள்ளம் சுருங்கியிருக்கின்றதோ அவருடைய நாவு நீளமாக இருக்கும்”**

என்பது அரபு முதுமொழியாகும். இவர்கள் அதிகம் பேசுவார்கள். படபடவென பொரிந்து தள்ளிக் கொண்டே இருப்பார்கள். உனக்கு என்ன துன்பம் ஏற்பட்டு விட்டது என்று இப்படிப் பதறுகின்றாய் என்று கேட்டால், எனக்கு இன்னும் என்ன துன்பம் தான் ஏற்பட்டுவிடவில்லை என்று பட்டெனப் பதில் சொல்வார்கள்.

இவர்களது பேச்சும், செயலும் அல்லாஹ்வுடைய



அருட்கொடைகளை நிராகரிப்பதாகவே இருக்கும். இருக்கும் அருளுக்கு நன்றி செலுத்த மாட்டார்கள். இல்லாத அருள்களைப் பற்றியே பேசிப் பேசி அல்லாஹ்வின் அருளை நிராகரிப்பார்கள். இதனால் இருக்கும் அருளின் அருமை தெரியாது. இருப்பதை வைத்து வாழ்வை அனுபவிக்கவும் இவர்களால் முடியாது. இருக்கும் அருளை நிராகரிக்கும் இத்தகையவர்களது வாழ்வு வளம்பெற மாட்டாது. செழிப்புறவும் மாட்டாது.

**“நீங்கள் நன்றி செலுத்தினால் நிச்சயமாக நான் உங்களுக்கு மேலும் அதிகப்படுத்துவேன் என்றும், நீங்கள் (நன்றி செலுத்தாது) நிராகரித்தால் நிச்சயமாக எனது தண்டனை கடுமையானதாக இருக்கும் என்றும் உங்கள் இரட்சகன் அறிவித்ததை (எண்ணிப்பாருங்கள்.)”**

*(14:07)*

அதிகம் பதற்றப்படுபவர்கள் எப்போதும் தனக்கு மேலே உள்ளவர்களைப் பார்த்து தன்னைத் தானே தாழ்த்திக் கொள்கின்றனர். எனது வீட்டில் எல்லோருடைய கணவர்களும் அழகானவர்கள். ஆனால் எனது கணவர் மட்டும் அழகற்றவர். எனது குடும்பத்தில் எல்லாப் பிள்ளைகளும் எனது பிள்ளைகளை விட அழகானவர்கள். இப்படியெல்லாம் கவலைப்படுபவர்கள் இருக்கிறார்கள்.

வாழ்க்கைத் துணை இல்லாமல் தவித்துக் கொண்டிருக்கும் பெண்களையும், குழந்தைப் பாக்கியம் இல்லாமல் ஏங்கிக் கொண்டிருக்கும் பெண்களையும் ஒருகணம் சிந்தித்துப் பார்த்தால் இந்தக் கவலை இவர்களை வாட்டுமா? வதைக்குமா? எனவே, எமக்கு கீழ் இருப்பவர்களை எண்ணிப் பார்த்துத் திருப்திப்படக் கற்றுக் கொள்ள வேண்டும். நமக்கு முன்னர் வாழ்ந்த நபிமார்கள், நல்லவர்கள் தமது வாழ்வில் சந்தித்த துன்பங்கள்,

சோதனைகள் என்பவற்றை சற்று படித்து பயன்பெற முயல வேண்டும்.

அடுத்து நடந்து விட்ட நல்லவற்றை நினைவில் வைத்து மீட்டிப் பார்க்கலாம். இழப்புக்கள், தோல்விகள் என்பவற்றை மறக்க முயல வேண்டும். இழப்புக்களை அடிக்கடி நினைவுபடுத்தி அதையே அசைபோட்டுக் கொண்டிருந்தால் அமைதி கிடைக்காது. எனவே, இழப்புக்கள் மற்றும் தோல்விகளை மறக்க வேண்டும். மறக்கும் சூழ்நிலைகளை உருவாக்க வேண்டும்.

அடுத்து அல்லாஹ் நாடியது நடக்கும். அதை யாராலும் மாற்ற முடியாது என்று உறுதியாக நம்ப வேண்டும். கழாகத்ரின் மீது உறுதியான நம்பிக்கை ஏற்பட்டு விட்டால் மலை போன்ற சோதனைகளையும் தாங்கிக் கொள்ளும் நிலை ஏற்பட்டு விடும். கழாகத்ர் பற்றி அல்லாஹ் கூறும் போது,

**“உங்களுக்குத் தவறிவிட்டதற்காக நீங்கள் கவலை கொள்ளாதிருப்பதற்காகவும், உங்களுக்கு அவன் வழங்கியவற்றிற்காக ஆணவம் கொள்ளாதிருப்பதற்காகவும் (விதியை ஏற்படுத்தினான்.) ஆணவமும், தற்பெருமையும் கொண்ட எவனையும் அல்லாஹ் நேசிக்கமாட்டான்”**

*(57:23)*

என்று கூறுவதும் இதைத் தான் உணர்த்துகின்றது.

ஏற்பட்ட எந்த இழப்பினாலும், சோர்வும், நம்பிக்கை ஈனமும் ஏற்பட்டுவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். நம்பிக்கையீனம் இன்னும் பதற்றத்தையே அதிகரிக்கும். எனவே, இழப்புக்கள் நம்பிக்கையீனத்தை ஏற்படுத்திவிடக்



கூடாது. அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்து மீண்டும் மீண்டும் முயற்சிகளை முடுக்கி விடவேண்டும். விழுந்தால் எழ வேண்டும். இதுதான் இயல்பான, யதார்த்தமான நிலையாகும். நான் விழுந்து விட்டேன் விழுந்து விட்டேன் என்று புலம்பிக் கொண்டிருந்தால் ஆகப் போவது எதுவும் இல்லை.

அடுத்து வாழ்வில் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் சிலரது கடந்த கால வாழ்வை அறிந்து கொள்ள வேண்டும். அவர்கள் ஆயிரம் சோகங்களையும், இழப்புக்களையும் அவமதிப்புக்களையும் தாண்டித்தான் வாழ்வில் உயர்வையும் அந்தஸ்தையும் அடைந்துள்ளனர் என்ற உண்மையை இதன் மூலம் அறியலாம்.

அடுத்து தொழுகையை முறையாகப் பேணித் தொழுவதன் மூலம் இந்தப் பதற்றத் தன்மையைத் தவிர்க்கலாம் எனக் குர்ஆன் கூறுகின்றது.

**“நிச்சயமாக மனிதன் பெரும் பதட்டக் காரனாகப் படைக்கப்பட்டுள்ளான். அவனுக்குத் தீங்கு நேர்ந்தால், பதட்ட மடைகின்றான். மேலும், அவனுக்கு நன்மை ஏற்பட்டால் (பிறருக்கு வழங்காது) தடுத்துக் கொள்கின்றான். தொழுகையாளிகளைத் தவிர. அவர்கள் தாம், தமது தொழுகையில் நிரந்தரமாக இருப்பவர்கள்.”**

*(70:19-23)*

இந்த வசனம் தொழுகையை முறையாக, நிரந்தரமாகப் பேணித் தொழுபவர்கள் நிதானமாக வாழும் பக்குவத்தைப் பெறுவார்கள் எனக் கூறுவதால் ஐவேளைத் தொழுகை மூலம் அல்லாஹ்விடம் மண்டியிடும் பக்குவத்தைப் பெற்று விட்டால் பதற்றத் தன்மையைத் தவிர்க்கலாம்.

அடுத்து அல்லாஹ்வை அதிகம் திக்ர் செய்வதன் மூலமும் மனதைத் திடப்படுத்தி அமைதிப் படுத்தலாம்.

**“நம்பிக்கை கொண்டோரின் உள்ளங் கள் அல்லாஹ்வை நினைவு கூர்வதன் மூலம் அமைதி பெறுகின்றன. அறிந்து கொள்ளுங்கள்! அல்லாஹ்வை நினைவு கூர்வதன் மூலம் உள்ளங்கள் அமைதி பெறுகின்றன’**
*(13:28)*

எனவே, அதிகம் திக்ர் செய்து மன அமைதி பெறுவதன் மூலம் பதற்றத் தன்மையைத் தவிர்க்கலாம்.

அடுத்து பதற்றப்படும் பெண் தன் பதற்றத் தன்மையை குழந்தைகளிடமும், தன்னைச் சூழ இருப்பவர்களிடமும் பரவிவிடக் கூடாது என்பதில் கவனம் செலுத்த வேண்டும். பதற்றம் ஒரு தொற்று நோயாகும். ஒரு சபையில் ஒருவர் பதற்றப்பட்டால் அனைவரையும் அது தொற்றிக் கொள்ளும். பதற்றப்படும் பெண்ணின் கட்டுப்பாட்டில் வாழும் குழந்தைகளிடமும் அத்தன்மை படர்ந்து விடும்.

சில பெண்களது பதற்றம் சில கணவர்களைக் கொலைக் களத்துக்குக்கூட இழுத்துச் சென்றுள்ளது. எனவே, உங்கள் பதற்றம் அதிகரிக்காமல் இருக்க நீங்கள் நிதானமானவர்கள் மத்தியில் வாழ வேண்டும். எனவே, உங்கள் குழந்தைகள், கணவன் என்போர் பதற்றப்படக் கூடாது என்றால் உங்கள் பதற்றத்தை அவர்களிடம் நீங்கள் காட்டக் கூடாது. அடுத்து, குழந்தைகளைக்கூட கஷ்டங்களைத் தாங்கிக் கொள்ளக் கூடியவர்களாகவும், பதற்றப்படாதவர்களாகவும் வளர்ப்பது முக்கியமாகும்.

உங்கள் பதற்றத்தை பலமடங்காகப் பெருக்கக்



கூடியவர்களை இனங்கண்டு அவர்களுடனான உறவுகளைக் குறைத்துக் கொள்ளுங்கள். உங்கள் வாழ்க்கை அகராதியிலிருந்து பொறுமை எனும் பதத்தை அழித்துவிடத் துடிக்கும் நண்பர்கள் குறித்து எச்சரிக்கையாக இருங்கள்.

மார்க்க அறிவும், பொறுமையும் உள்ள நன்மக்களுடன் தொடர்புகளை வளர்த்துக் கொள்ளுங்கள். அறிவு ஞானம்மிக்கவர்களிடம் ஆலோசனை பெறுங்கள். இதன் மூலம் அமைதி பெறுங்கள்.

வாழ்க்கை என்பது சோதனையே! அதனை உறுதியுடனும், நம்பிக்கையுடனும், நிதானத்துடனும் அணுகத் தயாராகுங்கள். வாழ்வில் வெற்றி பெறுங்கள். எனவே, பதற்றம் வேண்டாம் கண்ணே!





# பொறாமை வேண்டாம்

பொறாமை பெண்களின் கூடப்பிறந்த குணங்களில் ஒன்று. பொறாமை என்பது ஒருவித மனநோய் என்றுதான் கூற வேண்டும். தான் பெறாத ஒன்றை பிறர் பெறும் போது ஏற்படும் ஒருவகை உணர்வே பொறாமை உணர்வாகும். சிலர் தாம் பெற்றிருப்பதைத் தனக்குக் கீழே உள்ளவர்கள் பெறும் போதும் பொறாமை கொள்வர்.

பெண்களின் பொறாமைக் குணம் ஆச்சரியமானது. பொறாமை நெருக்கமானவர்களுக்கு மத்தியில் தான் ஏற்படும். அமெரிக்காவில் இருக்கும் ஒருவன் மீது இலங்கையில் இருப்பவன் பொறாமை கொள்ள மாட்டான். அடுத்து ஒரே துறையில் இருக்கும் இருவருக்கிடையே தான் பொறாமை ஏற்படும். ஆனால் பெண்களின் பொறாமை ஆச்சரியமானது.

தனது சகோதரிக்கு அழகிய கணவன் கிடைத்திருக்கிறான் என்று பொறாமை கொள்ளும் பெண்கள் இருக்கின்றனர். சில பெண்கள் தமது குடும்ப வாழ்வில் பல சிரமங்களை சந்தித்திருப்பர். கணவனால் காட்டுமிராண்டித்தனமாகத் தாக்கப்பட்டிருப்பர். இவர்கள் தங்களது மருமகள்களைப் பார்க்கின்றனர். தமது மகன்கள் அவர்களை அடிப்பதில்லை, தமது மருமகள் தாம் அனுபவித்த கஷ்டங்களை அனுபவிக்காமல் மகிழ்வாக வாழ்வதைப் பார்க்கும் போது சில மாமிகளுக்குப் பொறாமை ஏற்படுகின்றது.



இந்த சந்தர்ப்பத்தில் அந்தப் பெண் பெறும் இன்பத்தை நிறுத்த ஏதேனும் செய்ய முடிந்தால் செய்வார்கள். அப்படி இல்லையென்றால் புறம் பேசி, கோள் சொல்லி அல்லது அவதூறு கூறி அவளது கௌரவத்தைக் குறைக்க முயல்வார்கள். இந்தப் பொறாமைக் குணத்தால் மன அமைதி கெடுகின்றது. அல்லாஹ்வின் அதிருப்திக்கும், மக்களின் வெறுப்புக்கும் ஆளாக நேரிடுகின்றது. இது தேவைதானா?

**“நீங்கள் பொறாமை கொள்ளாதீர்கள்”** என அல்லாஹ்வின் தூதர் ஏவியுள்ளதை எடுத்து நடக்கக் கூடாதா?

**“அல்லாஹ் தனது அருளிலிருந்து அவர்களுக்கு வழங்கியதற்காக இம் மனிதர்கள் மீது அவர்கள் பொறாமை கொள்கின்றனரா?”**

*(4:54)*

அல்லாஹ் உங்களில் ஒருத்திக்கு அழகான கணவனை அல்லது குழந்தைகளை வழங்கியதற்காகப் பொறாமை கொள்கிறீர்களா? அல்லாஹ் ஒருத்திக்கு பணத்தையும் பேரையும் புகழையும் வழங்கி யிருப்பதற்காக உங்களுக்குப் பொறாமை ஏற்படுகின்றதா? அப்படியாயின் நீங்கள் அல்லாஹ்வை அல்லவா குறை காண்கின்றீர்கள்?

நீங்கள் பொறாமைக்காரியாக இருந்தால் உங்கள் நிம்மதியையும், மன அமைதியையும் நீங்களே கெடுத்துக் கொள்வீர்கள். நீங்கள் யார் மீது பொறாமை கொள்கிறீர்களோ அவர்கள் சந்தோசப்படும் போதெல்லாம் உங்களுக்குக் கவலை ஏற்படும். இது தேவை தானா?

உங்களோடு கூட இருப்பவர்கள் வாழ்வில் சந்தோசங்களை அனுபவிக்கும் போது அவர்கள் மீது பொறாமை கொள்வதை விட்டு விட்டு அவர்களை வாழ்த்தக் கற்றுக்கொள்ளுங்கள். உங்களுக்குக் கிடைக்காதது உங்கள் தோழிக்கோ, உறவுக்காரப் பெண்ணுக்கோ கிடைத்திருக்கிறதே என்று மகிழ்ச்சி கொள்ளுங்கள். மனதைத் தேற்றிக் கொள்ளுங்கள்.

உங்கள் உள்ளத்தில் ஷைத்தான் புகுந்து விளையாட இடமளிக்காதீர்கள். பொறாமைக் குணம் எட்டிப் பார்க்கும் போதே அல்லாஹ் தான் நாடியதை நாடியவர்களுக்கு வழங்குவான். இதைப்பற்றி நான் எதற்கு அலட்டிக் கொள்ள வேண்டும் என்ற கேள்வியை எழுப்பி மனதைத் தேற்றிக் கொள்ளுங்கள்.

**“இவர்களுக்குப் பின் வருவோர், ‘எங்கள் இரட்சகனே! எங்களையும், நம்பிக்கை கொள்வதில் எங்களை முந்திவிட்ட எமது சகோதரர்களையும் மன்னிப்பாயாக! இன்னும், நம்பிக்கை கொண்டோர் குறித்து எமது உள்ளங்களில் குரோதத்தை ஏற்படுத்தி விடாதே! எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நீ மிக்க மன்னிப்பவனும் நிகரற்ற அன்புடையவனுமாவாய்’ எனக் கூறுவார்கள்.”**

*(59:10)*

இவ்வாறு துஆச் செய்து மனதில் குரோத எண்ணம் தலைகாட்டுவதை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடிக்கொள்ளுங்கள்.

உங்களுடன் கூட இருப்பவர்கள் சிறப்பை அடையும் போது மகிழ்வடையக் கற்றுக் கொள்ளுங்கள். பொறாமை கொண்டு அவர்களின் அந்தஸ்தையும், மகிமையையும் குறைக்கும் வண்ணம் பேசித்



தொலைக்காதீர்கள். கூட இருப்பவர்கள் மகிழ்ச்சியுடன் இருக்கும் போது முகத்தை சுருட்டிக் கொண்டு சோகத்தில் வாடாதீர்கள். மலரும் பூக்களைக் கண்டு மனம் சோர்வடையலாமா? பூக்களின் நறுமணத்தை சுவாசிக்காமல் மூக்கை மூடிக் கொள்ளலாமா? எனவே, பொறாமை கொள்ளாதீர்கள். பொறாமை மூலமாக அல்லாஹ்வின் அன்பையும் மக்களது நேசத்தையும் இழந்து மன அமைதியையும் நிம்மதியையும் இழந்து, கோள் சொல்லி, புறம் பேசி, அவதூறு கூறி, பாவத்தைத் தேடாமல் உங்களைப் பாதுகாத்துக் கொள்ள முயற்சி செய்யுங்கள்.

நீங்கள் பிறர் மீது பொறாமை கொள்ளக் கூடாது. பிறர் உங்கள் மீது பொறாமை கொள்ளும் விதத்தில் நடந்து கொள்ளவும் கூடாது. இதிலும் நீங்கள் கூடுதல் கவனம் செலுத்த வேண்டும். வாழ்வில் வளங்களையும், உயர்வையும் அடையும் போது கர்வம் கொள்ளாதீர்கள். நீங்கள் அடையும் வளங்களால் உங்களைச் சூழ இருப்பவர்களும் நலம் பெறும் வண்ணம் பார்த்துக் கொள்ளுங்கள். அதே வேளை பிறரின் பொறாமையால் நீங்கள் பாதிக்கப்படாமல் இருக்க பின்வரும் விடயங்களில் அதிக அக்கறை செலுத்துங்கள்.

### 01. பொறாமைக்காரனின் தீங்கிலிருந்து அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுங்கள்.

**“இன்னும் பொறாமைக்காரன் பொறாமைப்படும்போது ஏற்படும் தீங்கை விட்டும் (நான் பாதுகாப்புத் தேடுகிறேன் என நபியே! நீர் கூறுவீராக!”**

*(113:5)*

பொறாமைக்காரனால் ஏற்படும் தீங்கிலிருந்து அல்லாஹ்விடம் இவ்வாறு பாதுகாவல் தேடுமாறு

அல்லாஹ் எமக்குக் கற்றுத் தந்துள்ளதைக் கவனத்திற் கொள்ளுங்கள்.

**02. அல்லாஹ்வை அஞ்சி தக்வாவுடன் வாழுங்கள்.**

**"எவர் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்கிறாரோ அவருக்கு அவன் ஒரு வழியை ஏற்படுத்து வான்"**

*(65:2)*

என்ற குர்ஆன் வசனத்தை மனதில் கொள்ளுங்கள். தக்வா உங்களுக்குப் பிரச்சினைகளிலிருந்து விடுபட வழி வகுக்கும்.

**03. அல்லாஹ்வின் மீது முழுமையாக நம்பிக்கை வைத்து தவக்குலுடன் வாழுங்கள்.**

**"எவர் அல்லாஹ்வின் மீது முழுமையாக நம்பிக்கை வைக்கின்றாரோ, அவருக்கு அவனே போதுமானவன். நிச்சயமாக அல்லாஹ் தனது காரியத்தை நிறைவேற்றுபவன்."**

*(65:3)*

என்ற குர்ஆன் வசனத்தை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். தவக்குல் உங்களுக்கு அல்லாஹ்வின் பாதுகாப்பைப் பெற்றுத் தரும்.

**04. பொறாமைக்காரர்கள் என்ன செய்வார்களோ என்று வீணே எண்ணி எண்ணி கவலை கொள்ளாதீர்கள்.**

அவள் சூனியம் செய்வாளோ, வசியம் செய்வாளோ, எதையாவது மந்திரித்துத் தந்து விடுவாளோ, என்மீதுள்ள பொறாமையில் எனது மாப்பிள்ளையை வளைத்துப் போட்டுவிடுவாளோ,



எனக்கும் என் கணவருக்கும், எனக்கும் என் பிள்ளைகளுக்கும் இடையில் பிரிவை ஏற்படுத்தி விடுவாளோ என சும்மா போட்டு மனதை அலட்டிக் கொண்டிருக்காதீர்கள். அல்லாஹ்வின் மீது நம்பிக்கை வைத்து உறுதியாகச் செயற்படுங்கள்.

**05. உங்கள் எதிரியால் ஏதேனும் கஷ்டங்கள் ஏற்பட்டால் பொறுத்துக் கொள்ளுங்கள்.**

**"நம்பிக்கை கொண்டோரே! பொறுமையைக் கொண்டும் தொழுகையைக் கொண்டும் உதவி தேடுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் பொறுமையாளர்களுடன் இருக்கின்றான்"**

*(2:153)*

என்ற குர்ஆன் வசனத்தை நினைத்துப் பாருங்கள். பொறுமை மூலம் அல்லாஹ்வின் உதவியைப் பெறலாம். எனவே, பொறுமையாக இருந்து அல்லாஹ்வின் உதவி மூலம் உங்களது எதிரியை வீழ்த்த முயலுங்கள்.





# போலிப் புகழாரம் வேண்டாம்

சில பெண்கள் போலிப் புகழ் பாடுவதில் வல்லவர்களாகத் திகழ்வர். தம்மைப் பற்றி எப்போதும் பீற்றித் திரிவர். இவர்களை அடுத்தவர்கள் மிக இலகுவாக அடையாளம் கண்டு கொள்வர். அவர்கள் பேசும் தொனி, ஸ்டைல், சப்ஜக்ட் அனைத்துமே அவர்களது புகழ் போதையைப் படம்பிடித்துக் காட்டிவிடும். இவர்கள் பெருமை பேசிவிட்டு நகர்ந்ததும் அடுத்த பெண்கள் இவளின் பேச்சைச் சொல்லிச் சொல்லியே சிரிப்பர். தாம் தம்மைச் சூழவுள்ள பெண்களால் இழிவாக நோக்கப்படுவதை உணராமலே இவர்கள் பீற்றித் திரிவர். இத்தகைய இயல்பைக் கொண்ட பெண்கள் மிக விரைவாகவே அடுத்தவர்களுக்கு பலிக்கடாக்களாகக் கூடியவர்கள். எனவே, இந்த குணம் ஆபத்தானது. இத்தகைய பெண்களை ஒரு பெண்ணோ அல்லது ஆணோ சில போலிப் புகழ் வார்த்தைகள் மூலம் இலகுவாக ஏமாற்றி காரியம் சாதித்து விடுவர். உங்கள் குரல் இனிமையாக இருக்கிறது, உங்களுக்கு மூன்று குழந்தைகள் இருக்கின்றன என்று கூறவே முடியாது போன்ற சாதாரண புகழ் வார்த்தையில் கூட சரிந்து விடுவர். எனவே, இந்தக் குணம் இல்லாது ஒழிக்கப்பட வேண்டியது அவசியமாகும்.

போலிப் புகழ் பாடுபவர்களை பல கூறுகளாகப் பிரித்து நோக்கலாம்.



## சுய புராணம் பாடும் பெண்கள்:

இவர்கள் எப்போதும் தம்மைப் பற்றி புகழ்பாடுவர். நான் அப்படி, நான் இப்படி, எனக்கென்றால் இப்படித்தான், நான் அணிந்துள்ள ஆடை, போட்டுள்ள நகை என்று சம்பந்தமே இல்லாமல் பேசுவர். இவர்கள் உண்டது, குடித்ததிலிருந்து பீற்றித் திரிவர்.

பிறர் தன்னைப் புகழும் போதே பணிவைக் கடைப்பிடிக்குமாறு இஸ்லாம் கூறும் போது எந்தத் தேவையும் இல்லாமல் உங்களை நீங்களே புகழ்ந்து தள்ளுவதை எந்த ரகத்தில் சேர்ப்பதென்று சிந்தித்துப் பாருங்கள்.

**“தம்மைத் தாமே பரிசுத்தவான்கள் என எண்ணிக்கொள்வோரை (நபியே!) நீர் பார்க்கவில்லையா? மாறாக அல்லாஹ்வே, தான் நாடுவோரைப் பரிசுத்தப்படுத்துகின்றான். மேலும், அவர்கள் சிறிதளவும் அநியாயம் செய்யப்படமாட்டார்கள்.”**

*(4:49)*

தம்மைத் தாமே புகழ்ந்து கொள்வது யஹூதி, நஸாராக்களின் பண்பாக இருந்ததை குர்ஆன் சுட்டிக் காட்டுகின்றது.

சுய புகழ்பாடும் பெண்களிடம் நான் நான் என்ற எண்ணமும், பெருமையும், கர்வமும் குடிகொண்டிருக்கும். இவ்வாறு சுய புராணம் பாடும் பெண்களிடம் கீழ்க்காணும் குணங்களும், இயல்புகளும் காணப்படுவது தவிர்க்கமுடியாததாகும்.

*01.* தன்னை உயர்த்திக் காட்டிக் கொள்வதற்காக தனது

ஆடை, செயற்பாடு, செலவினங்கள் அனைத்திலும் தன் சக்திக்கு மீறிச் செயற்பட ஆரம்பிப்பாள். இதனால் இவள் வாழ்வில் பலத்த இழப்புக்களைச் சந்திப்பாள். தான் பெரிய தர்மசாலி எனப் பீற்றுபவள் பிறர் முன்னிலையில் பிச்சைக்காரனுக்கும் வாரி வழங்கி தனது வள்ளல் தன்மையை நிரூபிக்கும் நிர்ப்பந்தத்திற்கு ஆளாவாள். இவ்வாறு இல்லாத செலவுகளைத் தானாக ஏற்படுத்திக் கொள்வாள்.

02. சிலர் எனது பிள்ளைகள், எனது ஊர், எனது குடும்பம் எனப் பெருமை பேசிக் கொண்டே இருப்பார்கள். தம்மைப் பற்றி மற்றவர்கள் குறைத்து மதிப்பிட்டுவிடுவார்களோ என்ற பயத்தில் சும்மா பீற்றித் தள்ளுவார்கள்.

03. இத்தகையவர்கள் பிறர் தம்மைப் புகழ வேண்டும் என எதிர்பார்ப்பர். புகழப் புகழ கொப்பில் ஏறிக் கொண்டே செல்வார்கள். எந்த இடத்தில் விழுவார்கள் என்பது இவர்களுக்கே தெரியாது.

04. இத்தகையவர்கள் தம்மைப் புகழ்பவர்களுக்காக எதையும் செய்யவும், இழக்கவும் தயாராவார்கள்.

இத்தகையவர்களிடம் புகழ்ந்து புகழ்ந்தே கறக்க வேண்டியதைக் கறந்துவிடலாம். இத்தகைய பெண்கள் ஆண்களின் வஞ்சக வலையில் இலகுவாக விழுந்துவிடுவர். சாதாரண தொலைபேசிப் பேச்சில் உங்கள் குரல் இனிமையாக இருக்கிறது! நீங்கள் ரொம்ப அழகாக இருக்கின்றீர்கள்! உங்கள் சிரிப்பு, தலை வாரும் ஸ்டைல் எனக்குப் பிடித்திருக்கிறது!... என்பன போன்ற சாதாரண வஞ்சக வார்த்தைகளுக்கே கிறங்க ஆரம்பித்து விடுவர்.



இன்றைய நவீன உலகில் சாதாரண ஒரு "மிஸ் கோல்" (***Missed Call***) மூலம் இத்தகைய பெண்கள் தமது வாழ்வை இழந்துள்ளனர். இணையத்தில் எதிர்த் தரப்பில் இருந்து பேசும் ஆண் யார்? எவர்? என்று தெரியாமலேயே அவனது போலிப் புகழாரத்தில் மயங்கி போஸ் கொடுத்து வாழ்வை இழக்கும் பெண்கள் இருக்கின்றனர். எனவே, புகழ் போதைக்கு அடிமையாவது ஆபத்தான குணமாகும்.

05. இத்தகைய பெண்கள் சபைகளிலும், நிகழ்ச்சிகளின் போதும் பிறர் பார்வை தம்மீது விழ வேண்டும் என்பதில் அக்கறை எடுப்பர். இது அவர்களின் வாழ்வில் பாதிப்புக்களை ஏற்படுத்தலாம்.

06. என்னிடம் அது இருக்கு, இது இருக்கு எனப் பீற்றுவர். அடுத்த வீட்டு ஆயிஷாவின் நகையைப் போட்டுக் கொண்டு போய் போன மாதம் தான் இதை வாங்கினேன் என ரீல் விடுவாள்.

07. தன்னைப் பெரிய புத்திசாலியாகவும், சிந்தனை வாதியாகவும் காட்டிக்கொள்ள கரிசனை எடுப்பாள். என்றாவது ஒரு நாள் முட்டாள்தனம் தெரிய வர நொந்து நூலாகிப் போவாள்.

08. இப்படிப்பட்ட பெண்கள் அவசியமின்றி அதிகம் பேசுவர். தம்மைப் பற்றியே அடிக்கடி பேசுவதால் கேட்பவர்களுக்கும் எரிச்சல் எரிச்சலாய் வரும்.

09. சில வேளை இவர்கள் அடுத்தவர்களைப் புகழ்வார்கள். அது கூட தம்மைப் புகழ்வதை உள்நோக்கமாகக் கொண்டிருக்கும். "நீங்க சுகமில்லாம இருக்கும் போது வந்த மனிதர் நல்ல மனிசர்கள். நீங்க ஏன்ட சொந்தம்

என்று தெரிந்து தான் உங்களைப் பார்க்கவந்தாங்க" எனக் கூறி அதிலும் தன்னை உயர்த்திக் கொள்வாள்.

10. தனது அந்தஸ்தைக் குறைக்கும் எனக் கண்டால் நீதி நியாயத்தையும், சத்தியத்தையும் இத்தகையவர்கள் மறுப்பார்கள்.

11. பலவீனமான ஏழை மக்களிடம் கர்வத்துடன் நடந்து கொள்வர். இவர்களுடன் கதைத்தால் தமது "ரெஸ்பெக்ட்" குறைந்துவிடும் என நினைப்பர். பணக்காரர்கள் பதவியில் உள்ளவர்களைக் கண்டால் விழுந்து விழுந்து உபசரிப்பர்.

12. தம்மைப் புகழாமல் தமது குறைகளைச் சுட்டிக்காட்டும் நல்லவர்களையும், நண்பர்களையும் பகைத்துக் கொள்வர். இதனால் இவர்கள் நல்ல நண்பர்களை இழந்து நயவஞ்வகக் கூட்டத்தின் நடுவே தான் வசிக்க நேரிடும்.

13. கர்வத்தின் காரணத்தினாலும், பெருமையின் காரணத் தினாலும் தமது தவறுகளை உணர்ந்தாலும் ஏற்றுக் கொள்ள முன்வரமாட்டார்கள். இதனால் இவர்கள் திருந்தும் வாய்ப்பு ரொம்ப ரொம்பக் குறைவாகும்.

இது போன்ற மற்றும் பல பாதிப்புக்கள் போலிப் புகழ் பாடுபவர்களுக்கு ஏற்படும். நாம் கூறிய அனைத்தும் இத்தகைய ஒருவரிடம் குடிகொண்டிருக்காவிட்டாலும், இவற்றில் பல இருக்க வாய்ப்புள்ளது.

போலிப் புகழாரம் இத்தகைய பாரிய பாதிப்புக்களை ஏற்படுத்துவதால் உங்களை நீங்களே



புகழ்ந்து தள்ளுவதைத் தவிருங்கள். பிறரிடம் பேசிய பின்னர் நான் பேசிய பேச்சில் என்னை நானே புகழ்ந்து தள்ளும் வார்த்தைகள், செய்திகள் இடம்பெற்றதா என்பதைச் சிந்தித்துப் பார்த்து அவற்றை நீக்க முயற்சி செய்யுங்கள்.

ஒரு உண்மையைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளுங்கள்! உங்களை நீங்களே எந்தளவுக்கு புகழ்கிறீர்களோ அந்தளவுக்கு உங்கள் மதிப்பும், மரியாதையும் அடுத்தவர் மனங்களில் குறைய ஆரம்பிக்கும். நீங்களே உங்களைப் புகழ்ந்து கொண்டிருக்க வேண்டியது தான். உங்களைப் புகழப்படத்தக்க ஒருவராக சமூகம் மதிக்காது.

14. தன்னைத் தானே புகழ்ந்து கொண்டிருப்பவர்களிடம் இயல்பாகவே பெருமை இருக்கும். பொறாமை இருக்கும். இவள் தன்னை விட உயரத்தில் இருப்பவர்கள் மீது பொறாமை கொள்வாள். தான் உயர்வதற்கு அவர்கள் தாழ்ந்து வர வேண்டும், என்று எண்ணுவாள்.

15. பிறர் செய்த நன்மைகள், பிறரினால் ஏற்பட்ட நல்ல விளைவுகள் எல்லாம் என்னால் தான் ஏற்பட்டது. இதற்கெல்லாம் நான்தான் காரணம். நான் இல்லாவிட்டால் இது நடந்திருக்காது என்றெல்லாம் பேசிக்கொள்வாள்.

**"தாம் செய்தவற்றிற்காக மகிழ்வடைபவர்களையும், செய்யாத வற்றுக்காகப் புகழப்படுவதை விரும்புபவர்களையும் அல்லாஹ்வின் வேதனை யிலிருந்து வெற்றி பெற்றவர்கள் என்று நீர் ஒருபோதும் நினைக்க வேண்டாம். அவர்களுக்கு நோவினை தரும் வேதனை உண்டு."** *(3:188)*

தான் செய்யாதவற்றுக்கெல்லாம் பிறர் தன்னைப் புகழ வேண்டும் என எதிர்பார்ப்பவர்கள் இந்த வசனத்தை நிதானமாகச் சிந்திக்கக் கடமைப்பட்டுள்ளனர்.

## மார்க்க விவகாரத்தில் புகழை எதிர்பார்த்தல்:

புகழ் விரும்பிகளிடம் ஏற்படும் பெரிய தவறு இதுதான். தான் ஒரு இபாதத்தைச் செய்துவிட்டு அதற்காகக்கூட பிறரால் புகழப்பட வேண்டும் என்று விரும்புவார்கள். இது அந்த இபாதத்தையே அழித்துவிடக்கூடிய கொடிய குற்றம் என்பதை உணர மறுக்கின்றனர். ஒரு பெண் வழமையாக தஹஜ்ஜுத் தொழுபவளாக இருக்கலாம். இது யாருக்கும் தெரியாதல்லவா? இதை எப்படி வெளியில் காட்டிக் கொள்வதென்று பார்ப்பாள். பேச்சோடு பேச்சாக இதைச் சொல்வதற்கு வழிபார்ப்பாள். இன்றைக்குக் கொஞ்சம் எழும்ப சுணங்கிவிட்டது. தஹஜ்ஜுத் தொழாதது என்னமோ போல இருக்குது.... இந்த மாதிரிப் பேச்சுக்களால் தான் தினமும் தஹஜ்ஜுத் தொழுவதைப் பறைசாட்டிவிடுவாள்.

<u>நெருப்பும், தண்ணீரும் ஒன்று சேராதது போல் இஹ்லாசும், மக்கள் தன்னைப் போற்ற வேண்டும்; புகழ வேண்டும்; இதன் மூலம் மக்களிடமிருந்து ஏதாவது எனக்குக் கிடைக்க வேண்டும் என்ற எண்ணமும் ஒரு உள்ளத்தில் ஒன்று சேராது</u> என இமாம் இப்னுல் கையிம்(ரஹ்) அவர்கள் தனது "அல்பவாஇத்" எனும் நூலில் குறிப்பிடுவதை இத்தகையவர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும். இபாதத்தின் மூலம் புகழை எதிர்பார்த்தால் அங்கே இஹ்லாஸ் இருக்காது. இஹ்லாஸ் இல்லாத வணக்கம் அல்லாஹ்வால் அங்கீகரிக்கப்படாது. அத்துடன் இது "ரியா" எனும் சிறிய இணைவைத்தல் சார்ந்த குற்றமாகும் என இஸ்லாம் குறிப்பிடுகின்றது.



புகழ்போதைக்கு மனிதன் அடிமைப்படுவதால் சிலர் புகழ்ந்து புகழ்ந்தே காரியம் சாதிப்பவர்களாக இருக்கின்றனர். வழமையான, பொதுவான விடயத்திற்காகவும் இவர்கள் புகழ்வார்கள். இல்லாததைச் சோடித்தும் இவர்கள் புகழ்வார்கள். இந்த வகையில் இந்தப் புகழ் ஒரு மலிவான இலஞ்சமாக மாறியுள்ளது. சிலர் புகழ் வார்த்தையைக் கேட்டதும் கொஞ்சம் கொஞ்சமாக மதிமயங்க ஆரம்பித்து விடுகின்றனர்.

ஈற்றில் போலிப் புகழ் பாடி தனது நோக்கத்தை அடைந்து கொள்கின்றான். புகழ் போதையில் மயங்கியவள் ஏமாளியாகி விடுகின்றாள். இவள் ஏமாளியாகின்ற அதே நேரம் தன்னைப் புகழாதவர்களைத் தனது எதிரியாப் பார்க்கவும், தன்னைப் புகழ்பவர்களை நண்பர்களாக மாற்றிக் கொள்ளவும் முற்படுகின்றாள்.

முதலில் இவள் எதற்காக எனக்கு ஐஸ் வைக்கிறார்கள். இவள் புகழக்கூடிய விடயம் என்னிடம் இருக்கின்றதா? இல்லையா? இல்லையென்றால் இல்லாததைச் சொல்லி எதற்காக என்னைப் புகழ வேண்டும் என்றெல்லாம் சிந்திக்க வேண்டும். <u>உங்களை நேசிக்கும் போது உங்களிடம் இல்லாததைச் சொல்லிப் புகழ்பவர்கள் உங்களைக் கோபிக்கும் போது உங்களிடம் இல்லாத குறைகளைச் சொல்லி இகழ்பவர்களாக இருப்பார்கள் என்பதை உணர்ந்து கொள்ளுங்கள்.</u>

பெண்கள் பிறரின் புகழ் வார்த்தையில் வெகுவிரைவாக விழுந்துவிடுகின்றனர். அவர்களின் உடலழகு, உடையழகு, குணவழகு பற்றி புகழ்ந்துவிட்டால் அவர்களிடம் இலேசாகக் காரியம் சாதிக்கலாம். உங்களுடைய குடும்பமே கொடுத்துக் கொடுத்துக் கை

சிவந்த குடும்பமாச்சே என்று கூறிவிட்டு அதை இவளும் சரியென ஏற்றுக் கொண்டால் அதன் பிறகு அவள் கேட்பதைக் கொடுக்க வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாக நேரிடும். பெண்கள் குறிப்பாக தம்மைப் புகழும் ஆண்கள் குறித்து மிக விழிப்பாக இருக்க வேண்டும்.

உங்களை ஒருவர் புகழ்கிறார் என்றால் அது கொஞ்சம் ஓவராகவும் இருந்தால் நிச்சயமாக அவர் உங்களிடம் எதையோ அடைய விரும்புகிறார். அதுவும் குறுக்கு வழியில் அடைய விரும்புகின்றார் என்பதை அறிந்து உசாராகிவிடுங்கள்.

உங்களைப் பார்த்து ஒருவர் இரகசியம் பேணக்கூடியவர் என்று அதிகமாகப் புகழ்ந்தால் அவரது பெரிய குற்றம் ஒன்றை மறைக்கச் சொல்கிறார் என்று அர்த்தம். நீங்கள் பிறருக்கு உதவும் தன்மை கொண்டவர். யாருக்கும் இயலாது என்று கூறாமல் ஒத்துழைப்பவர் என்று கூறினால் உங்களிடம் ஏதோ ஒரு வேலைக்கு, அல்லது ஒரு வேலை அது ஒரு பாவமாகக்கூட இருக்கலாம். உங்களிடம் உதவி தேடப்போகிறார் என்று அர்த்தம். உங்களைத் தாராள குணம் கொண்டவராகப் புகழ்ந்தால் ஏதோ தானம் கேட்கப் போகிறார் என்று அர்த்தம்.

உண்மையில், புகழ்ப் போதைக்கு அடிமையாகாத உறுதியான இதயத்தைக் கொண்ட பெண் இதற்கெல்லாம் மசியமாட்டாள்.

தான் இந்தப் போலியான புகழ் வார்த்தை களுக்கோ அல்லது அளவுக்கு மீறிய ஐஸ் வைத்தலுக்கோ அடிமையல்ல. இதுவெல்லாம் எனக்குத் தேவையில்லை



என்ற உணர்வுடன் செயற்படுவாள். இந்தப் புகழ் வார்த்தைகள் மூலம் தனது உணர்வுகளுடன் அடுத்தவர்கள் விளையாட அவள் இடம் கொடுக்கமாட்டாள்.

மனிதன் பிற மனிதனின் குறைகூறலுக்கு அஞ்ச ஆரம்பித்தால் அழியத் துவங்கிவிடுவான். ஏனெனில் மக்கள் புகழ வேண்டும். மக்களது இழி சொல்லுக்கு ஆளாகிவிடக் கூடாது என்பதை மட்டுமே இலக்காக் கொண்டு செயற்படுவான். பிழையைச் செய்து மக்களால் புகழப்படுவதை விட சரியைச் செய்து மக்களால் இகழப்படுவது அல்லாஹ்விடத்தில் அருளைப் பெற்றுத்தரக் கூடியதாகும். அல்லாஹ் உங்களைக் கோபிக்கும் போது மக்களின் புகழ் வார்த்தையோ, நேசமோ உங்களுக்கு என்ன பயனை அளிக்கப் போகின்றது?

இதனால்தான் நபித்தோழர்களிடம் நபி(ﷺ) அவர்கள் அல்லாஹ்வின் விடயத்தில் பழிப்போரின் பழிச் சொல்லுக்கு அஞ்சமாட்டோம் என உறுதிமொழி வாங்கினார்கள்.

எனவே, மக்களின் புகழ் தான் குறிக்கோள் என்கிற எண்ணம் கூடாது. நாம் இருப்பது சரியென்றால் உலகமே பழித்தாலும் பரவாயில்லை என்ற உறுதியுடன் இருக்க வேண்டும். **“உங்களைப் போலியாகப் புகழ்பவர்களைக் கண்டால் அவர்களின் முகத்தில் மண்ணை வாரி இறையுங்கள்”** (முஸ்லிம்) என்ற நபிமொழியை எண்ணிப் பாருங்கள்.

நல்ல விடயத்தில் ஒருவரைப் புகழ்வதால் அவர் இன்னும் அதிக நன்மை செய்வார். அது அடுத்தவர்களையும் நன்மை செய்யத் தூண்டும்

என்றிருந்தால், புகழப்படுபவரின் உள்ளத்தில் அது தீய எண்ணங்களைத் தோற்றுவிக்காது என்றிருந்தால் புகழ்வதற்கு அனுமதியுள்ளது. இது போலிப் புகழாரத்தில் சேராது.

உங்களை நீங்களே புகழும் போக்கிலிருந்தும், பிறரை எல்லை மீறிப் புகழும் பழக்கத்திலிருந்தும், பிறர் புகழும் போது அதற்கு மதிமயங்கும் தன்மையிலிருந்து உங்களை நீங்களே தற்காத்துக் கொள்ளுங்கள்.

எனவே,
போலிப் புகழாரம் வேண்டாம்!
போலிப் புகழாரத்திற்கு அடிமையாகவும் வேண்டாம்!
பிறரைப் புகழ்ந்து தன் காரியம் சாதிக்கவும் வேண்டாம்!
புகழ் போதையிலிருந்து விடுபடுவோம்!...........







# தப்பெண்ணம் வேண்டாம்

சிலருக்கு அடுத்தவரைப் பற்றி எப்போதும் கீழ்த்தரமான எண்ணம் தான் இருக்கும். அடுத்தவர் எதை ஏன், என்ன நியாயத்திற்காகச் செய்கின்றனர் என்று அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் இருக்கும். சிலர் பொறாமை காரணத்திற்காகவும் உளவு மனப்பான்மை யாலும் இந்த நிலைக்கு உள்ளாகின்றனர். பெண்களில் பலருக்கு இந்த நோய் இருக்கின்றது.

ஒருவர் தொலைபேசியில் பேசிக் கொண்டிருக் கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். இவருக்கு அருகில் செல்ல வேண்டி ஏற்பட்டால் இவர்களின் நடையின் வேகம் குறையும் தேவையில்லாமல் அந்த இடத்தில் ஏதேனும் ஒரு வேலையை ஆரம்பிப்பர். அவர் பேசும் பேச்சில் முடிந்தவரை சிலவற்றையாவது கேட்டு அதற்கு கை, கால், மூக்கு, காது வைத்து இவள் எப்படியாவது ஒரு கதை அமைத்துவிடுவாள்.

இருவர் இரகசியமாக ஏதாவது பேசுவது போல் தென்பட்டால் காதைக் கூர்மையாக்கிக் கொண்டு அவர்களின் உதட்டு அசைவைக் கண்காணித்தவாறு அவர்கள் என்ன பேசுகின்றனர் என்பதைக் கண்டுபிடிப்பதற்காக அபரிமிதமான முயற்சி செய்வாள்.

அடுத்த வீட்டு முற்றத்தில் யாராவது பேசிக் கொண்டிருந்தால் தனது முற்றத்தைக் கூட்டுவது போல் தோரணை செய்து அவர்களின் பேச்சு எதைப்பற்றிப்

போய்க் கொண்டிருக்கின்றது என்பதை அவதானித்துக் கேட்டு அனுமானித்துக் கொள்வாள். இத்தகைய பெண்களுக்கு ஜன்னல் ஓரம், வீட்டு வாசல், வேலியோரம் என்பன பிடித்த இடங்களாகத் தெரியும்.

சில பெண்கள் தனது மகளும், மருமகனும், மகனும் மருமகளும் என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிவதற்காகக் கூட கண்ணையும், காதையும் கூர்மையாக்கிக் கொண்டு அலைவதுண்டு.

அடுத்தவர்களின் கடிதங்கள், அவர்களின் ஓட்டோகிராப், டயரி, ஈமெயில், செல்போனில் வந்துள்ள **SMS**கள் இவற்றைப் படிப்பது சிலருக்கு விறுவிறுப்பான நாவல் படிப்பதை விட சுவாரஷ்யமாக இருக்கும்.

இன்னும் சிலர் இருக்கின்றனர். தூரத்தில் இருவர் பேசிக் கொண்டிருப்பர். அவர்கள் என்ன பேசிக் கொள்கின்றனர் என்பதை அறிய வேண்டும் என்று ஆவல் கொள்வர். இவர்கள் சிலபோது ஏதேனும் உள நோயால் பாதிக்கப்பட்டிருப்பர். யார் என்ன பேசினாலும் தன்னைப் பற்றித்தான் பேசுகின்றார்களோ என்ற சந்தேகம் இவர்களுக்கு எழும். இதே நேரம் அவர்களில் யாராவது இவளைப் பார்த்துவிட்டால் தன்னைப் பற்றித்தான் பேசுகின்றனர் என உறுதியாக நம்ப ஆரம்பித்து விடுவாள். எனவே, அவர்கள் என்ன பேசுகின்றனர் என்பதை அறிய முயற்சிப்பாள். முடியாவிட்டால் சிலபோது அவர்களில் ஒருவரிடம் மெதுவாகக் கதை கொடுத்து என்ன பேசப்பட்டது என்பதை அறியும் வரை அவளுக்கு உறக்கமே வராது. அடுத்தவர்கள் மீது கெட்ட எண்ணம் ஏற்படுவதால்தான் இந்த உளவுக் குணம் உண்டாகின்றது. குர்ஆனும், ஹதீஸும் இந்த உளவுக் குணத்தைத் தடுக்கின்றது.



உளவு பார்ப்பவர்களுக்கு ஏதேனும் செய்தி கிடைத்தால் வேட்டைக்குச் சென்றவர்களுக்கு நல்ல வேட்டைப் பிராணி கிடைத்த மகிழ்ச்சியைப் பெறுவார்கள். உளவு பார்த்தால் போதும் என்றிருந்தவருக்கு தனது உளவுப் பணியின் முடிவை அடுத்தவர்களுக்குச் சொல்லும் வரை நிம்மதியிருக்காது. எனவே, அவள் புறம் பேச வேண்டிய நிலை ஏற்படுகின்றது. எனவேதான் அல்லாஹ் தன் திருமறையில்,

**"நம்பிக்கை கொண்டோரே! எண்ணங்களில் அதிகமானதைத் தவிர்ந்து கொள்ளுங்கள். நிச்சயமாக எண்ணங்களில் சில பாவமாகும். மேலும், நீங்கள் துருவித்துருவி ஆராயாதீர்கள். இன்னும், உங்களில் சிலர் மற்றும் சிலரைப் புறம் பேசவும் வேண்டாம். உங்களில் எவரேனும் இறந்த தனது சகோதரனின் மாமிசத்தை உண்ண விரும்புவாரா? அதை நீங்கள் வெறுத்து விடுவீர்கள்"** *(49:12)* என்று கூறுகின்றான்.

இந்த திருமறை வசனத்தை நன்றாக அவதானியுங்கள். இதில் அல்லாஹுத்தஆலா

1. தீய எண்ணத்தைத் தடுக்கின்றான்.
2. உளவு பார்ப்பதைத் தடுக்கின்றான்.
3. புறம் பேசுவதைத் தடுக்கின்றான்.

இந்த மூன்று தவறுகளும் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்தவைகளாகும். எனவேதான் நபி(ﷺ) அவர்களும்,

**"தப்பெண்ணம் கொள்வதை விட்டும் உங்களை நான் எச்சரிக்கின்றேன். ஏனெனில் தப்பெண்ணம்தான் பெரிய பொய்யாகும். உங்களில் ஒருவருக்கொருவர் ஒற்றுக் கேட்காதீர்கள், உளவு பார்க்காதீர்கள், இரகசியம் பேசாதீர்கள், பொறாமை கொள்ளாதீர்கள், பகைமை கொள்ளாதீர்கள். நீங்கள் அல்லாஹ்வின் அடிமைகளாகவும், உங்களுக்கு மத்தியில் சகோதரர்களாகவும் ஆகிவிடுங்கள்.**

**என்று கூறினார்கள்.**"

அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரழி)
ஆதாரம்: புஹாரி: 6066)

எனவே, இந்த ஹராத்திலிருந்து நாம் விடுபட வேண்டும் என்ற உறுதியை எடுத்துக் கொள்ள வேண்டும். அடுத்தவர்கள் என்ன பேசினால் நமக்கென்ன? அவர்கள் பேசுவதைப் பதிவதற்கு மலக்குகள் இருக்கிறார்கள். நாம் என்ன செய்கின்றோம் என்பதும் அல்லாஹ்வால் கண்காணிக்கப்படுகின்றது என உறுதி கொண்டு, இந்த உளவுப் பணியை உதறித் தள்ளுங்கள்.

அடுத்தவர்களின் குறைகளை அறிந்து கொள்வதில் அலாதிப் பிரியத்துடன் திரியும் பெண்கள் தம்மைச் சூழும் பெரும் ஆபத்தை அறிந்து கொள்ள வேண்டும். நீங்கள் அடுத்தவர் குறைகளை அறிய ஆவல் கொண்டால் உங்கள் குறைகளும் பகிரங்கத்திற்கு வந்துவிடும். இதை நடைமுறையிலும் நீங்கள் உணரலாம்.

**"உள்ளத்தில் ஈமான் நுழையாமல் உதட்டளவில் மட்டும் ஈமான் கொண்டவர்களே! முஸ்லிம்கள் குறித்து புறம் பேசாதீர்கள்! அவர்களின் குறைகளையும் தேடித் திரியாதீர்கள்! ஏனெனில், யார் முஃமின்களின் குறைகளைத் தேடித் திரிகின்றார்களோ அவர்களின் குறைகளை அல்லாஹ் தேட ஆரம்பித்துவிடுவான். யாருடைய குறையை அல்லாஹ் தேடுகின்றானோ அவனது வீட்டிலேயே அவனை அல்லாஹ் இழிவுபடுத்துவான்."** என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ஆறிவிப்பவர்: அபூபர்ஸா அல் அஸ்லமி(ரழி)
ஆதாரம்: அபூதாவுத்

எனவே, அடுத்தவர் குறையைத் தேடுவதை அடியோடு நிறுத்துங்கள்.



சில பெண்கள் இந்த இயல்பு காரணமாக அடுத்தவர்களை உற்றுப் பார்ப்பார்கள். அடுத்த வீட்டில் என்ன நடக்கிறது, யார் வருகின்றார்கள், என்ன கொண்டு வருகின்றார்கள், எவ்வளவு நேரம் தங்கினார்கள், இவ்வளவு நேரம் என்ன பேசியிருப்பார்கள்? எனப் பல ஆய்வுக் கேள்விகள் இவர்களது அடி மனதில் உதித்துக் கொண்டே இருக்கும். விடை கிடைக்காவிட்டால் இவர்களுக்கு நிம்மதியாக இருக்க முடியாது. எனவே, கேட்டுத் தொலைத்துவிடுவது என்று முடிவு செய்துவிடுவர்.

இதனால் யார் வந்தது? என்ன பார்சல் பெரிதாக இருந்திச்சே! அவ்வளவு நேரம் என்ன செய்தார்கள்! உங்கட வீட்டுக்காராரும் இல்லை! அவங்க எங்க தங்கினார்கள்! என அலுத்துப் போகும் வரைக்கும் கேட்டுத் தொலைப்பர். இத்தகைய பெண்கள் யாரிடத்திலும் நல்ல பெயர் வாங்க முடியாது. அடுத்தவர் விஷயத்தில் அளவுக்கு மீறி மூக்கை நுழைப்பது ஆகுமானதுமல்ல. அழகானதுமல்ல. உண்மையில் இந்தக் கேள்விகளுக்குப் பின்னால் இவர்களுடன் கூடப் பிறந்த பொறாமைக் குணமும் அடுத்தவர் பற்றிய தப்பான எண்ணங்களும்தான் காரணியாக இருக்கும்.

அடுத்த வீட்டுக்குள் அவர்களது அனுமதி இல்லாமல் பார்வையை ஓடவிடுவது ஹராமாகும். எனவேதான் ஸலாம் கூறி பதில் வந்த பின்னர்தான் உள்ளே செல்ல வேண்டும். அந்த ஸலாத்தைக் கூட உள்ளே பார்த்துக் கொண்டு சொல்வதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை.

**"நபி(ஸல்) அவர்களது வீட்டுக்குள் ஒருவர் பார்வையை விட்டார். அவர் பார்ப்பதைப் பார்த்த நபி(ஸல்) அவர்கள் நீ**

**பார்ப்பது முன்னரே தெரியுமென்றால் உன் கண்களில் குத்தியிருப்பேன். பார்வை நுழைவதற்கு முன்னர் அனுமதி பெற வேண்டும் என்று கூறினார்கள்.** ” *(புஹாரி: 6901)*

இமாம் புஹாரி(ரஹ்) அவர்கள் இந்த ஹதீஸுக்குத் தலைப்பிடும் போது,

“ஒருவர் வீட்டுக்குள் உற்றுப் பார்த்து அவர்கள் இவரது கண்ணைப் பழுதாக்கினால் இதற்குத் தெண்டப் பரிகாரம் இல்லை” என்ற தலைப்பில் இடம்பெறச் செய்துள்ளார்கள்.

எனவே, இது சாதாரண குற்றமில்லை என்பதைக் கவனத்திற் கொள்ளவும். அடுத்தவர்கள் பேசுவதை ஒற்றுக் கேட்பது குறித்து நபி(ﷺ) அவர்கள் கண்டித்துக் கூறும் போது,

“**யார் ஒரு கூட்டத்தில் பேசும் பேச்சை அவர்கள் வெறுக்கும் நிலையில் கேட்கின்றாரோ அவரது காதில் மறுமையில் ஈயம் காய்ச்சி ஊற்றப்படும்**” எனக்கூறினார்கள்.

*(முஸன்னப் இப்னு அபீஷைபா: 102*
*அல் அதபுல் முப்ரத்: 1159 - தபரானி: 11472)*

எனவே, ஒற்றுக் கேட்காதீர்கள்; உளவு பார்க்காதீர்கள்; அடுத்தவர்களைப் பற்றி தப்பாக எடை போடாமல் உங்களைப் பற்றி சிந்தியுங்கள். சில பெண்களிடம் இந்த இயல்பு இருக்கும் அதே நேரத்தில் இந்த உளவு வேலைக்குத் தமது உறவினர்களையும் பயன்படுத்தி அவர்களையும் குற்றவாளிகளாக்குகின்றனர். மறுமையை மனதில் கொண்டு இந்தக் குற்றச் செயலை விட்டும் விலகிக் கொள்வோம்.





# பண்பாடு வேண்டும்

சில பெண்கள் பண்பாடோ, நாகரீகமோ இல்லாமல் நடந்து கொள்வதைக் காணலாம். இவர்களின் இத்தகைய பண்பாடற்ற நாகரீகமற்ற இயல்புகளும், நடத்தைகளும் அடுத்தவர்களுக்கு பெருத்த அசௌகரியத்தை அளித்து வருகின்றன. எனினும் இத்தகைய பெண்கள் இவ் இழி குணங்களின் பாதிப்பை உணர்வதில்லை. இவர்களின் இங்கிதமற்ற நடத்தைகளால் அடுத்த சமூகம் முஸ்லிம் சமூகத்தையே தரக்குறைவாக எடை போடும் நிலையும் ஏற்படுவதுண்டு.

சில பெண்கள் பயணத்தின் போது பக்கத்திலிருக்கும் பெண்களுடன் பேசிக் கொண்டு வருவர். அது அந்த பஸ்ஸில் இருக்கும் அனைவருக்கும் கேட்கும். குடும்பப் பிரச்சினை, பக்கத்து வீட்டுப் பிரச்சனையென்று அலசிக் கொண்டு வருவர். அடுத்தடுத்த இருக்கைகளில் இருப்பவர்கள் ஏளனமாகப் பார்ப்பது கூட இவர்களுக்குப் புரிவதில்லை.

சில நேரங்களில் பயணங்களில் இருக்கும் போது தொலைபேசி அழைப்பு வந்தால் ஊருக்கே கேட்க உரத்துக் கத்துவார்கள். இவர்களின் இத்தகைய நடத்தைகளால் முஸ்லிம்கள் நாகரிகம், பண்பாடு அற்றவர்கள் என்ற எண்ணப் பதிவு அடுத்தவர்களின் மனதில் ஆழமாகப் பதிந்துவிடுகின்றது.

ஒருவரது வீட்டுக்குள் நுழைவதாக இருந்தால் ஸலாம் சொல்லி பதில் வந்ததன் பின்னர் அவர்கள் உள்ளே வாருங்கள் என கூறிய பின்னரே உள்ளே நுழைய வேண்டும். சில பெண்கள் திறந்த வீட்டுக்குள் எதுவோ நுழைவது போன்று நுழைந்து விடுவர். வீட்டில் இருப்பவர்களுக்கு முன்னால் போய் நிற்கும் வரை இவர்கள் உள்ளே வந்தது அவர்களுக்குத் தெரியாதிருக்கும்.

சிலர் "மாமி... வேலையா?" என்று கேட்டுக் கொண்டே அடுப்பங்கரை வரை வந்துவிடுவர். வீடென்பது அவரவருக்குரிய அமைதிக்குரிய இடமாகும். அவரவர் தத்தமது இல்லத்தில் எந்த நிலையில் இருப்பர் என்று கூறவே முடியாது. எனவே, ஸலாம் கூறி அனுமதி பெற்றுத்தான் உள்ளே நுழைய வேண்டும். இது பற்றி அல் குர்ஆன் கூறும் போது,

**"நம்பிக்கை கொண்டோரே! உங்கள் வீடுகள் அல்லாத வேறெந்த வீடுகளிலும் நீங்கள் அனுமதி கோராமலும், அதில் உள்ளோருக்கு ஸலாம் கூறாமலும் நுழைய வேண்டாம். நீங்கள் உபதேசம் பெறுவதற்கு இதுவே உங்களுக்குச் சிறந்ததாகும்."** *(24:27)* என்று கூறுகின்றது.

இந்த வசனத்தைக் கவனத்திற் கொள்ளாமல் நடந்து கொள்வது அநாகரிகமான நடத்தை மட்டுமன்று மார்க்க வரம்பை மீறுவதாகவும் திகழ்கின்றது.

ஒருவரது வீட்டுக்கு ஒருவர் செல்கிறார். கொஞ்சம் தாமதித்து வாருங்கள் என வீட்டுக்காரர் சொல்கின்றார். இப்போது அந்த மனிதர் திரும்பி வந்தாக வேண்டும். "இவன் ஒரு மனிசனா? இவன்ட வீட்டுக்கு இனி நாயும் போகாது!...." என்றெல்லாம் பேசுகின்றனர். ஒருவருடைய வீட்டுக்குச் சென்று மூன்று முறை ஸலாம் கூறி பதில்



கிடைக்கவில்லையென்றால் திரும்பிவிட வேண்டும். அதே வேளை ஆள் இருந்து நீங்கள் போய் பின்னர் வாருங்கள் என்றால் மறுப்போ, மனக் கசப்போ இல்லாமல் திரும்பிவிட வேண்டும். வீட்டுக்காரர்கள் என்ன நிலையில் இருக்கிறார்கள் என்பது எமக்குத் தெரியாது. எனவே இதனை ஒரு குறையாகவே எடுத்துக் கொள்ளக் கூடாது. இது பற்றி அல் குர்ஆன் இப்படிக் கூறுகின்றது.

**"அங்கு நீங்கள் எவரையும் பெற்றுக்கொள்ள வில்லையாயின், உங்களுக்கு அனுமதியளிக்கப்படும் வரை அதில் நீங்கள் நுழைய வேண்டாம். 'நீங்கள் திரும்பி விடுங்கள்!' என்று உங்களுக்குக் கூறப்பட்டால் திரும்பி விடுங்கள். இதுவே உங்களுக்கு மிகப் பரிசுத்தமானதாகும். நீங்கள் செய்பவற்றை அல்லாஹ் நன்கறிந்தவன்."**

*(24:28)*

சில பெண்கள் பொருத்தமற்ற நேரங்களில் அடுத்த வீட்டுக்குச் சென்று கதைத்துக் கொண்டிருப்பார்கள். வீட்டுக்காரர்களுக்கு வெறுப்பு வெறுப்பாக வரும். ஆனால் என்ன செய்ய என்று வேண்டா வெறுப்புடன் கதைத்துக் கொண்டிருப்பார்கள். உணவு சமைக்கும் நேரம், பகல் உணவு உண்டு ஓய்வெடுக்கும் நேரம், இரவு தூங்கச் செல்லும் நேரம் என நேர-காலம் தெரியாமல் அடுத்தவர் வீட்டுக்குச் சென்று வளவள என பேசிக் கொண்டிருப்பது அருவருக்கத்தக்க நடத்தையாகும்.

சில பெண்கள் தனக்கு ஓய்வென்றால் அடுத்தவர்களுக்கும் ஓய்வாகத்தான் இருக்கும் என்ற எண்ணத்தில் கதைத்துக் கொண்டிருப்பர். இதுவும் அநாகரீகமான நடத்தையாகும். சிலர் தனக்குத் தூக்கம் போகவில்லையென்பதற்காக அடுத்தவருடன் கதைத்துக் கொண்டிருப்பர். இதில் வயது போனவர்கள் சிலருடைய

நடத்தை பலருக்கு எரிச்சல் ஊட்டுவதாக அமைந்து விடுவதுண்டு. அவர்களுக்கு வீட்டில் வேலையில்லை. கதைத்துக் கொண்டிருக்க ஆளும் இல்லை. அடுத்தவர் வீட்டுக்குச் சென்று ஹாயாகக் கதைத்துக் கொண்டிருப்பார்கள். அவள் தனது வேலையையும் முடித்துக் கொள்ள முடியாமல் இவர்களது முகத்தையும் முறித்துக் கொள்ள முடியாமல் படும் திண்டாட்டம் சொல்லிமாளாது.

சில பெண்கள் இருப்பர். பக்கத்து வீட்டு பாத்திமா பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருப்பாள். அங்கு போய் கதை கொடுப்பர். படிச்சால் தானே வாழ்க்கையில் முன்னேற முடியும் என்று ஒரு லெச்சர் கொடுப்பர். சில போது என்னத்தப் படிச்சிக் கிழிக்க, படிச்சி தொழிலா செய்யப்போற, பொம்பள படிச்சாலும் அடுப்பங்கரையில் தான் அவட வாழ்க்கை கழியும் என்ற தொனியில் பேசி மனதைக் குழப்புவர். நன்றாகக் கதைத்து அரைமணி, ஒரு மணி நேரத்தைத் திருடிவிட்டு நீ படி புள்ள என நடையைக் கட்டுவர். அந்த பாத்திமாவின் நெருப்பு நிமிடங்களைக் கொள்ளையடித்தது மட்டுமல்லாமல் மனதில் குழப்பத்தையும், எரிச்சலையும் உண்டுபண்ணி விட்டுப் போய்விடுவர். அடுத்தவர்களின் நிமிடங்களைக் கொள்ளையடிப்பது கொடிய குற்றம் என்பதை இவர்கள் உணருவதே இல்லை.

சில பெண்கள் ஒரே இடத்திற்கு அடிக்கடி செல்வார்கள். செல்லும் போதெல்லாம் தேவையில்லாமல் பேச்சை நீட்டிக் கொண்டு செல்வர். இதனால் அடுத்தவர் எரிச்சல்பட நேரிடும். நித்தமும் போனால் முற்றமும் சலிக்கும் என்ற முதுமொழியை இத்தகையவர்கள் நினைத்துப் பார்க்க வேண்டும்.



சில பெண்கள் இவ்வாறு போவதுடன் நிறுத்திக் கொள்ள மாட்டார்கள். “என்ன உங்கட மாமி ஒரு மாதிரியா இருக்கிறா? ஏதும் பிரச்சினையா?....” என்று கிளருவர். வீட்டுக்காரி தனி அறைக்குச் சென்றால் அப்போதும் கூடவே சென்று வீட்டு சாமான்களை உலத்த ஆரம்பிப்பாள்.

இன்னும் சில பெண்கள் அடுத்த வீட்டுக்குச் சென்று அவர்களது போனைக் கண்ட பின்னர் ஒரு கோல் எடுக்கிறேன் எனக் கேட்டு அடுத்த முனையில் இருப்பவர்களுடன் “நான் யார் பேசுறன்.. சொல்லுங்க பாப்பம்... எங்கள மறந்துட்டீங்க... எங்கட ஞாபகம் இல்லை... சமைச்சிட்டீங்களா? என்ன கறி......” என தேவையில்லாத விஷயங்களையெல்லம் பேசித் தொலைப்பார்கள். இப்போது கைபேசிகள் பரவலானதால் இந்தப் பண்பாடற்ற செயற்பாடுகளும் குறைந்துவிட்டன.

சில பெண்கள் விருந்துக்கு அழைக்கப்படாமல் செல்வதுண்டு. சிலர் கூடவே ஓரிருவரை அழைத்துக் கொண்டு செல்வதுமுண்டு. ஒருவர் விருந்துக்கு அழைத்தாலே தவிர செல்லக் கூடாது. ஒருவரது அனுமதியின்றி அவரது விருந்துக்கு இன்னுமொருவரை அழைத்துச் செல்லலாகாது.

சில பெண்கள் ஒரு வீட்டுக்கு விருந்துக்குச் செல்வர். எந்த வீட்டில் விருந்தினர்கள் வந்தாலும் வீட்டுப் பெண்களுக்கு ஒரு திடீர் டென்ஷன் உண்டாகிவிடுகின்றது. அதே நேரம் வீட்டுக்கு விருந்தினர்கள் வரும் போது வீட்டுப் பிள்ளைகளின் தொல்லைகளும் இரட்டிப்பாகிவிடுவதுண்டு. இந்த நேரத்தில் விருந்துக்கு வந்தவர்கள் கூட உதவினால் அல்லது பிள்ளைகளையாவது கவனித்துக் கொண்டால் பெரிதும் ஆறுதலாக இருக்கும். சில பெண்கள் செதுக்கி

வைத்த சிலை போல இருப்பர். சமையல் பணியில் உதவவும் மாட்டார்கள். குழந்தைகளைச் சமாளிக்கவும் மாட்டார்கள். சில போது சமைக்கிற பெண்ணே தன்னுடன் ஒழுங்காகக் கதைக்கவில்லையென பின்னர் கோபித்துக் கொள்வர்.

மற்றும் சிலர் இருக்கின்றனர். திடுதிடு என திடீர் விஜயம் செய்வர். வீட்டுக்காரர்களுக்குக் கையும் ஓடாது... காலும் ஓடாது.. என்ன செய்வது என தலையைப் பிய்த்துக் கொள்வர். இந்த இலத்திரனியல் யுகத்தில் அறிவித்துவிட்டுச் செல்வதில் இவர்களுக்கு என்ன நஷ்டமோ தெரியவில்லை.

சிலர், கூப்பிட்டுவிட்டார்கள்; வேன் போகிறது; சும்மா போகிற வேனில் குஞ்சு குறுமான்களையெல்லாம் ஏற்றிக் கொண்டு போய் அந்த வீட்டை மட்டுமல்ல அக்கம் பக்கத்து வீடுகளையும் ஒரு கலக்குக் கலக்கிவிட்டு வந்துவிடுவர். கூப்பிட்டவர்கள் ஏண்டா கூப்பிட்டேன் என நொந்து நோகும் அளவுக்கு நடந்து கொள்வர்.

மற்றும் சிலர் பகல் சாப்பாட்டுக்கு அழைக்கப்பட்டால் பகல் மூன்று-நாலு மணிக்குச் சென்று வீட்டுக்காரர்களைக் காக்க வைத்தே வெறுக்க வைத்துவிடுவர். ஒரு முஸ்லிம் அடுத்த மனிதர்களுக்கு எந்த வகையிலும் தொல்லை கொடுக்காதவனாக இருக்க வேண்டும்.

எனவே, பண்பாட்டையும் நாகரீகத்தையும், இஸ்லாம் கூறும் ஒழுக்க மாண்புகளையும் பேணி நடப்பதன் மூலம் பிறருக்குத் தொல்லை கொடுக்காத ஒரு வாழ்வை முன்னெடுத்துக் கொள்வோமாக!





# அநியாயம் வேண்டாம்

இஸ்லாம் நீதி நெறிகளைப் போற்றும் மார்க்கமாகும். அநியாயத்தை இஸ்லாம் அணுவளவும் ஆதரிக்கவோ, அனுமதிக்கவோ இல்லை. இஸ்லாத்தின் எதிரிகளான யூதர்கள் நபி(ﷺ) அவர்களைக் கொலை செய்ய முயற்சி செய்ததால் யூதர்கள் மீது முஸ்லிம்களுக்கு வெறுப்புணர்வு ஏற்பட்டது. இந்த வெறுப்புணர்வு கூட அநியாயத்திற்குக் காரணமாகிவிடக் கூடாது எனப் போதித்த மார்க்கம் இஸ்லாமாகும்.

**“நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வுக்காக நீதியை நிலைநிறுத்துபவர்களாகவும் (அதற்கு) சாட்சியாளர்களாகவும் இருங்கள். ஒரு கூட்டத்தின் மீதுள்ள வெறுப்பு, நீங்கள் நீதி செலுத்தாதிருக்க உங்களைத் தூண்ட வேண்டாம். நீங்கள் நீதி செலுத்துங்கள். அதுவே பயபக்திற்கு மிக நெருக்கமானதாகும். மேலும், அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிந்தவனாவான்.”**

*(5:8)*

பெண்களில் பலர் நீதி நெறியை மறந்து அநியாயமாக நடந்துகொள்பவர்களாகவும், அநியாயத் திற்குத் துணை போகின்றவர்களாகவும் இருக்கின்றனர். தனக்கும், தான் நேசிப்பவர்களுக்கும் ஒரு சட்டம், ஒரு நிலைப்பாடு. தான் வெறுப்பவர்களுக்கு வேறு நிலைப்பாடு என்ற இரட்டை நிலைப்பாடு பெண்களிடம் அதிகமாகவே காணப்படுகின்றது.

## மாமியார் கொடுமை:

பெண்களின் நீதி நெறிக்கு முரணான அநியாயமும், அக்கிரமமும் நிறைந்த கோர முகத்தின் வெளிப்பாடாகவே மாமியார் ஸ்தானம் திகழ்கின்றது. நானும் ஒரு பெண், என் மருமகளும் ஒரு பெண் என்ற நிலைப்பாடு இல்லாமல் மருமகளின் உணர்வுகளை ஊனப்படுத்தும் நடவடிக்கைகளில் சிலர் இறங்கி விடுகின்றனர். குத்து வார்த்தைகள், கேவலப்படுத்தல், குறைத்துப் பேசுதல், கோள் மூட்டுதல், குற்றம் குறைகளைத் தேடுதல், நன்மை நலவுகளைக் கூட குறைமதியோடு நோக்குதல் போன்ற பல ரூபங்களில் மாமியாரின் அநியாய முகம் களை கட்டும்.

தான் பெற்ற பிள்ளையை ஒரு மாதிரியாகவும் தன் மருமகளை ஒரு மாதிரியாகவும் பார்த்து, அதில் பாகுபாட்டை வெளிப்படுத்துவர். பெண்களின் இந்த இழிகுணங்களால்தான் "மாமியார் உடைத்தால் மண்குடம். மருமகள் உடைத்தால் பொற்குடம்" போன்ற பழமொழிகள் தோன்றக் காரணமாயின.

சில மாமிமார்கள் அவர்கள் மருமகளாக இருக்கும் போது தமது மாமியாரின் கொடுமைக்கு ஆளாகியிருப்பர். இத்தகைய பெண்கள் தமது மருமகள் குறித்து எப்படி நியாயமாக சிந்திக்க வேண்டும். எனது மாமியார் என்னைக் கேவலப்படுத்தும் போது நான் எவ்வளவு கேவலப்பட்டேன். அது போலதான் எனது மருமகளும் அவதிப்படுவாள். அந்த நிலைக்கு அவளை நான் தள்ளக் கூடாது என்று நினைக்க வேண்டும். ஆனால் நான் எவ்வளவு கஷ்டப்பட்டேன் இவள் மட்டும் சொகுசாக இருப்பதா? என்று நினைத்து மாமியார் மருமகளை "ரெக்கின்" ***(Ragging)*** செய்ய ஆரம்பித்துவிடுகின்றாள்.



தனது மகளுக்கு அவளது மாமியார் வீட்டில் நடக்கும் அநியாயங்களை வாய் கிழிய எதிர்ப்பவள் தனது மருமகளுக்கு அதே அநியாயங்களை முன்நின்று செய்கின்றாள். இவ்வாறு பெண்ணின் கோர முகத்தின் வெளிப்பாடாக மாமியார் அந்தஸ்து மாறிவிட்டதே!

**"நெருங்கிய உறவினர்களாக இருந்தபோதிலும் நீங்கள் பேசும்போது நீதியாகவே நடந்து கொள்ளுங்கள்."**

*(6:152)*

தனது மகளையும் மருமகளையும் வேறுபடுத்திப் பார்க்கும் பெண்கள் இந்த வசனத்தைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். சொல்லும், செயலும் நீதியானதாக இருக்க வேண்டும்.

பெண்ணின் அன்பு முகத்தின் வெளிப்பாடு தாய்மையாகும். இந்தத் தாய்மை நிலையிலும் பெண் சிலபோது அநியாயத்தை வெளிப்படுத்துவது ஆச்சரியமாகும்.

ஆண் பிள்ளைகளை ஒரு மாதிரியும், பெண் பிள்ளைகளை ஒரு மாதிரியும் பார்த்து அநியாயம் செய்துவிடுகின்றாள். சில போது பெண் பிள்ளை பருவமடைந்து அவளை கட்டிக் கொடுக்க முடியாத நிலையில் தானும் கஷ்டப்படும் நிலை வரும் போது இவள் பேசும் பேச்சுக்களும், நடக்கும் விதங்களும் அந்த இளம் நெஞ்சில் ரணத்தை ஏற்படுத்தி விடுகின்றது. பொறந்த நேரமே செத்துத் தொலஞ்சிருந்தா நிம்மதியா இருந்திருக்கும். இதுட தரித்திரியம் முடிஞ்சபாடில்ல. இப்படியெல்லாம் பேசி அவளின் உள்ளத்தைக் காயப்படுத்தும் உள்ளமும், ஆண் பிள்ளை-பெண்பிள்ளை

என வேறுபாடு காட்டிப் பார்ப்பது தாய்மையின் அநியாயமாகும்.

இந்த நிலை அவள் பாட்டியாகும் போது வேறு ரூபத்தில் வெளிப்படுகின்றது. ஒரு பாட்டி தனது மகனின் பிள்ளைகளுடன் நடந்து கொள்ளும் முறையையும் மகளின் பிள்ளைகளுடன் நடந்து கொள்ளும் முறையையும் எடுத்து நோக்கினால் அதிலும் வேறுபாடும், வித்தியாசமும் இருக்கின்றது.

மகளின் பிள்ளைகளிடம் மிக அன்பாக இருக்கும் பாட்டி மகனின் பிள்ளைகளிடம் குறைவாகவே அன்பை வெளிப்படுத்துகின்றாள். மகனின் பிள்ளைகளுக்கும், மகளின் பிள்ளைகளுக்கும் இடையில் பிரச்சினை ஏற்படும் போது மகளின் பிள்ளைகளின் பக்கம் சாய்ந்துவிடுவதைப் பார்க்கலாம்.

மருமகளின் மீதுள்ள கோபத்தின் வெளிப்பாடாக இந்தப் பாகுபாடு வெளிப்படுகின்றது. இவ்வாறு அன்பு முகம் கூட அநியாய முகமாக மாறும் ஆச்சர்யம் நிகழ்ந்து வருகின்றது.

மருமகள்கள் மாமியார்களால் பாதிக்கப்பட்டால் அதற்கும் அவர்கள் குறைவில்லாமலே பழி தீர்த்துக் கொள்கின்றனர். மாமியார் கொடுமை என்பது திருமணம் முடித்து ஒரு வருடங்களுக்குள் முடிந்துவிடும். ஆனால் மருமகள் இதற்குப் பல வருடங்களாகக் கொஞ்சம் கொஞ்சமாகப் பழி தீர்த்துக் கொள்கின்றாள்.

நான் ஒரு வயது முதிர்ந்த தாயை நோய் விசாரிப்பதற்காகச் சென்றிருந்தேன். அவர் தன் மருமகள்



வீட்டில்தான் இருந்தார். அப்போது அந்தத் தாயின் மகனும், மருமகளும் ஒரு திருமண விருந்திற்காகச் சென்றிருந்தனர். இந்தத் தாய் படுத்த படுக்கையாக இருந்தார். மலசலம் எல்லாம் படுத்த படுக்கையோடு போகும் நிலை. நாம் சென்றதும் அந்தத் தாய் அவசரமாக மருமகள் வர முன்னர் சாப்பிடுவதற்கு ஏதாவது சரி தாங்க! எனக் கெஞ்சினார். சாப்பிட்டால், குடித்தால் கட்டிலிலேயே மலசலம் கழிப்பாள் என்பதால் மருமகள் உணவு, பானம் கொடுப்பதில்லை என அந்த மூதாட்டி கூறினார். பூனையைப் பட்டினி போட்டு சாகடித்த பெண் நரகம் செல்வாள் என்று கூறிய மார்க்கத்தைப் பின்பற்றும் ஒரு மருமகளின் கல் மனதைப் பார்த்தீர்களா? இப்படி எத்தனை பேர் உலகிலேயே நரக வாழ்வை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்களோ. அல்லாஹ்தான் அறிவான். இந்தக் காட்சியைக் காணும் போதுதான் நபி(ﷺ) அவர்கள் முதிர் வயதில் வாழ்வதை விட்டும் பாதுகாப்புத் தேடியதன் உண்மையான அர்த்தம் புரிந்தது.

மாமியார் என்பது பெண்ணின் அநியாய முகத்தின் ஒரு பகுதியென்றால் மருமகள் என்பது மறு பகுதியாகக் கோர காட்சி தருவதை உலக மட்டத்தில் பரவலாகக் காணமுடிகின்றது. இந்த இருசாராரும் இஸ்லாமிய வரையறைகளை மீறிச் செயற்படுவதுதான் இந்த செயற்பாடு தொடர்வதற்கு வழியாக அமைந்துள்ளது. தனக்கு தன் மாமி செய்ததை மன்னிக்கும் மனநிலை மருமகளுக்கு வர வேண்டும். அறியாமையாலும், தவறான உளவியல் பாதிப்புக்களினாலும் மாமி ஸ்தானத்தில் இருப்போர் சில தவறுகளைச் செய்துவிடுகின்றனர். தான் செய்தது தவறு என்பதை அவர்கள் உணர்ந்து அவதிப்படும் தருணத்தில் மருமகள் தனது பதிலடியையும், பழி தீர்க்கும் நடவடிக்கையையும் ஆரம்பித்து

விடுகின்றாள். இந்த நிலையில் நல்ல பெண்களும் தனது இறுதிக் காலத்தைக் கவலையுடன் கழிக்கும் நிலை ஏற்படுகின்றது. இதற்கு முடிவே இல்லையா?

மாமியார்களைப் பொறுத்தவரையில் மகன் மீது கொண்ட அபரிமிதமான பாசம் தனது மகளை எங்கிருந்தோ வந்தவள் ஆள்கிறாளே என்ற தவறான எண்ணம், மருமகள் மகனைக் கைக்குள் போட்டுக் கொண்டு தான் பெற்றெடுத்து வளர்த்த மகனைத் தன்னிடமிருந்து பிரித்துவிடுவாளோ என்ற எண்ணம் இவளை அடக்கி வைக்காவிட்டால் இவள் என்னை அடக்க ஆரம்பித்துவிடுவாள் என்ற பயமெல்லாம் சேர்ந்து தப்பாகச் செயற்பட வைக்கின்றது.

எனவே, அவர்களின் வயது, தியாகம் என்பவற்றைக் கவனத்திற் கொண்டு அவர்கள் விடயத்தில் பழிவாங்கும் போக்கைக் கைவிட்டு பணிந்து போகும் பக்குவத்தை மருமகள்மார் பெற வேண்டும். தான் தனது கணவன் மூலம் அனுபவிக்கும் எல்லா அனுகூலங்களுக்கும் காரணமாக இருந்தவள் தனது மாமிதான் என்பதை உணர்ந்து விட்டுக் கொடுத்து நடக்க வேண்டும்.

பெண்ணின் அன்பு, பாசம் காரணமாகவும் அவள் அநியாயக்காரியாக மாறும் நிலை ஏற்படுகின்றது. தன் பிள்ளை மீது கொள்ளும் பாசத்தின் காரணமாக அடுத்த பிள்ளைகளுக்கு அநியாயம் செய்கின்றாள். ஏதேனும் பிரச்சினை ஏற்பட்டால் நீதி, நியாயமாகப் பேச வேண்டும் என்பதை மறந்து தனது பிள்ளையின் தவறை மறைத்துப் பேசுகின்றாள். அடுத்த பிள்ளைகளின் சின்னத் தவறையும் பூதாகரமாக்கிக் காட்ட முயற்சிக்கின்றாள்.



கணவன் மீதுள்ள பாசத்தால் கூட பெண் இப்படி நடந்து கொள்வதுண்டு. பக்கச் சார்பு என்பது பெண்ணின் பிறவிக் குணம் போன்றே ஆகிவிட்டது.

திருமணம் தொடர்பில் பெண்களின் அநியாய முகம் அகோரமாகக் காட்சியளிப்பதைச் சமூகத்தில் காணலாம்.

ஒரு ஆண் பலதாரமணம் புரிந்திருந்தால் முதல் மனைவி இரண்டாம் மனைவிக்கு அநியாயம் செய்து, எப்படியாவது இருவரையும் பிரித்துவிட சதி செய்வதைக் காண்கின்றோம். சில போது இரண்டாம் மனைவி முதல் மனைவியை அந்தரத்தில் விட்டுவிட்டுத் தன் கணவன் தன்னோடு மட்டும் இருக்க வேண்டும் என்று விரும்புகின்றாள். இதனால் முதல் மனைவி மட்டுமன்றி அவளது குழந்தைகளும் நடுத்தெருவுக்கு வரும் நிகழ்வுகளை நாம் அன்றாடம் கண்டு வருகின்றோம்.

இவ்வாறே ஒருவன் தனது மனைவி இறந்த பின்னர் அல்லது விவாகரத்தான பின்னர் இன்னொரு திருமணம் முடித்தால் இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்பட்டவள் முதல் தாரத்தின் குழந்தைகளை கொடுமைப்படுத்துவதைக் காண்கின்றோம். அவர்களை வேலைக்காரக் குழந்தைகள் போன்று நடத்துகிறாள். முறையாக உண்ணக் கொடுக்காமல், நிம்மதியாகத் தூங்கவிடாமல் அநியாயம் செய்கின்றாள். சில வேளை அவளுக்கு இவரை முடிக்கும் முன்னர் வேறு திருமணம் முடித்திருந்து குழந்தையும் இருந்து விட்டால் இந்தப் பிள்ளைகளின் பாடு பெரும்பாடுதான். இதனால் சிலர் மனைவி மரணித்துவிட்டால் விபச்சாரம் செய்தாலும் பரவாயில்லை வேறு திருமணம் முடித்துவிடக் கூடாது என எண்ணும் நிலை ஏற்பட்டுள்ளது.

சிலவேளை முதலாம் தாரத்தின் பிள்ளைகள் பெரிய பிள்ளைகளாக இருந்தால் தமது தந்தையின் இரண்டாம் தாரத்தை அவர்கள் இம்சிப்பதையும் கூட காணமுடிகின்றது. இந்த சூழ்நிலைகளிலெல்லாம் பெண்ணின் அநியாய முகம் ஆக்ரோஷமாகக் காட்சியளிக்கும்.

பெண்ணிடம் இருக்கும் இன்னொரு நீதியற்ற அல்லது அநியாய முகம்தான் ஒருவரைப் புகழ்வதாக இருந்தாலும், இகழ்வதாக இருந்தாலும் அதில் நடுநிலையைக் கடைப்பிடிப்பதில்லை. தமக்கு விருப்பமானவர்களின் குறைகளைக் கண்டு கொள்ளாமல் புகழ்ந்து தள்ளுவர். தமக்குப் பிடிக்காதவர்களின் நிறைகளை நினைத்துப் பார்க்காமலேயே இகழ்ந்து தள்ளுவர். இதனால் இவர்கள் அடிக்கடி கட்சி மாறும் சூழ்நிலை ஏற்படுகின்றது.

தனது சகோதரி பக்கத்து வீட்டுக்காரியோடு கோபம். அதனால் தானும் அவளுடன் கோபம். அவள் பக்கத்து வீட்டுக்காரியோடு கோபித்துக் கொண்டால் தனது பிள்ளைகளும் அவளுடன் கோபித்துக் கொள்ள வேண்டும். அவர்களது வீட்டுக்குப் போகக் கூடாது. அத்துடன் பிரச்சினை நின்றுவிடாது. அந்த வீட்டுக்கும் போகக் கூடாது. அவர்களுடைய பிள்ளைகளுடனும் விளையாடக் கூடாது என்று சட்டம் போடுவர். ஏன் தமது தாய் அடிக்கடி இப்படி மாறுகின்றாள் என்பதை அறியாமலேயே அந்தப் பிஞ்சுகள் பெற்றோர் சொல்லை முழுமையாகக் கேட்கவும் முடியாமல், தட்டவும் முடியாமல் பக்கத்து வீட்டுப் பிள்ளைகளுடன் பெற்றோருக்குத் தெரியாமல் விளையாடுவார்கள், உறவை வளர்ப்பார்கள்.



தமக்குள் ஏற்பட்ட கோபத்திற்காகப் பிஞ்சு உள்ளங்களில் எதற்காக நஞ்சை ஊற்ற வேண்டும்?

தமக்கு நெருக்கமானவர்கள் அடுத்தவர்களுடன் பகைத்துக் கொண்டால் அதற்கான காரணத்தைப் பார்க்க வேண்டும். அதில் யார் பக்கம் நியாயம் இருக்கின்றது என்று அவதானிக்க வேண்டும். நமக்கு வேண்டியவர்களிடத்தில் நியாயம் இல்லையென்றால் அவர்களுக்கு எந்த வகையிலும் நாம் ஒத்துழைக்கக் கூடாது.

**"அநியாயம் செய்தோர் பக்கம் நீங்கள் சாய்ந்து விட வேண்டாம். (அவ்வாறெனில்) நரகம் உங்களைத் தீண்டும். அல்லாஹ்வை அன்றி உங்களைக் காப்பாற்றுவோர் எவரும் இல்லை. பின்னர் நீங்கள் உதவி செய்யப்படவும் மாட்டீர்கள்."** *(11:113)*

அநியாயத்திற்குத் துணை போவது நரகம் சொல்வதற்குக் காரணமாக அமையும் என இந்த வசனம் கூறுகின்றது.

**"மஸ்ஜிதுல் ஹராமுக்குச் செல்லவிடாது உங்களைத் தடுத்த ஒரு கூட்டத்தாரின் மீதுள்ள வெறுப்பு (அவர்கள் மீது) வரம்பு மீறுவதற்கு உங்களைத் தூண்டவேண்டாம். நன்மை செய்வதிலும், (அல்லாஹ்வை) அஞ்சி நடப்பதிலும் ஒருவருக்கொருவர் உதவியாக இருந்து கொள்ளுங்கள். மேலும், பாவம் செய்வதிலும், வரம்பு மீறுவதிலும் ஒருவருக்கொருவர் உதவியாக இருக்காதீர்கள். மேலும், அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் தண்டிப்பதில் கடுமையானவனாவான்."**

*(5:2)*

எனவே, அநியாயத்திற்கும், அக்கிரத்திற்கும் துணை போய்விடக் கூடாது என்பதில் அவதானம் தேவை.

**“உனது சகோதரன் அநியாயக்காரனாக இருந்தாலும், அநியாயத்திற்குட்பட்டவனாக இருந்தாலும் அவனுக்கு உதவி செய் என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள். அப்போது ஒருவர், அநியாயத்திற்குட்பட்டவர்களுக்கு உதவுவது நியாயம். அநியாயக்காரனுக்கு எப்படி உதவுவது? என்று கேட்ட போது ‘அநியாயம் செய்பவனை அநியாயம் செய்வதை விட்டும் தடுப்பதுதான் அவனுக்குச் செய்யும் உதவி’ என்று நபியவர்கள் கூறினார்கள்.”**

*(புஹாரி: 6952)*

எனவே, உங்களுக்கு வேண்டியவர்கள் அநியாயம் செய்ய உதவாதீர்கள். அவர்களை அநியாயத்தை விட்டும் தடுங்கள். அதுவே நீங்கள் அவர்களுக்குச் செய்யும் உதவியாகும்.

பெண்களில் சிலர், தாம் பெற்ற பிள்ளைகளுக்கே அநியாயம் செய்பவர்களாக உள்ளனர். மருமகளுக்கு, மாமிக்கு, உடன் பிறந்த சகோதர - சகோதரிகளுக்கு, கணவன் குடும்பத்தினருக்கு, கணவனின் மறு மனைவிகளுக்கு, அவர்களின் குழந்தைகளுக்கு, அண்டை அயலவர்களுக்கு என சிலரது அநியாயப் பட்டியல் நீண்டு கொண்டே செல்வதுண்டு. இவர்கள் தமது வாழ்நாளில் தாம் சில அநியாயங்களுக்கும், அவமதிப்புக்களுக்கும் ஆளான போது தமது மனம் பட்ட கஷ்டங்களை எண்ணிப் பார்க்க வேண்டும். இதைச் சிந்தித்தாவது அநியாயத்திலிருந்து தவிர்ந்து கொள்ள முனைய வேண்டும்.

அநியாயம் செய்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள் என அல் குர்ஆனும், ஹதீஸும் எச்சரிக்கின்றன. இந்தத் தண்டனையிலிருந்து தப்ப வேண்டுமென்றால் நாம் யாருக்கு அநியாயம் செய்தோமோ அவர்களிடம் முதலில்



மன்னிப்புக் கோர வேண்டும். அடுத்து அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோரி தண்டனையிலிருந்து நம்மைத் தற்காத்துக் கொள்ள வேண்டும்.

**“தனது அநியாயத்தின் பின் எவர் பாவ மன்னிப்புத் தேடி, (தன்னைச்) சீர்செய்து கொள்கின்றாரோ, நிச்சயமாக அல்லாஹ் அவரை மன்னிப்பான். நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும் நிகரற்ற அன்புடையவனுமாவான்.”** *(5:39)*

தௌபாச் செய்து தம்மை சீர் செய்து கொள்கின்றவர்களுக்கு மன்னிப்பு உண்டு என இந்த வசனம் கூறுகின்றது. இல்லையென்றால் நாளை மறுமையில் இதற்காகவும் பரிகாரம் காண நேரிடும்.

**“ஒருமுறை நபியவர்கள் ஸஹாபாக்களைப் பார்த்து ‘அனைத்தையும் இழந்து ஓட்டாண்டியாகப் போனவன் யார் என்று தெரியுமா’ எனக் கேட்டார்கள். அதற்கு நபித்தோழர்கள், ‘யாரிடத்தில் ஒரு தீனாரோ, திர்ஹமோ இல்லையோ அவர்தான் ஓட்டாண்டி என்று கூறினர்” அதற்கு நபியவர்கள் ‘அனைத்தையும் இழந்த ஓட்டாண்டி அவன் அல்ல. நாளை மறுமையில் ஒருவன் தனது தொழுகை, நோன்பு, ஸகாத் போன்ற அமல்களோடு வருவான். அப்போது சிலர் வந்து இவன் எனது செல்வத்தை எடுத்தான், இவன் என்னை அடித்தான் என முறைப்பாட்டை முன்வைப்பார்கள். இவனது நன்மையை எடுத்து பாதிக்கப்பட்டவர்களுக்கு அல்லாஹ் கொடுப்பான். அதற்குப் பின்னரும் சிலர் வந்து என்னைப் பற்றிப் பொய் சொன்னான், அவதூறு சொன்னான் என்றெல்லாம் முறைப்பாடு வைப்பார்கள். இப்போது இவனிடம் நன்மைகள் இல்லாததால் பாதிக்கப்பட்டவர்களது பாவத்தை எடுத்து இவன் மீது போடப்பட்டு இவன் நரகத்தில் வீசப்படுவான். இவன்தான் உண்மையான ஓட்டாண்டியாவான் எனக் கூறினார்கள்.”**

சகோதரிகளே!

செய்த அநியாயங்கள் எதுவாக இருந்தாலும் நிச்சயமாக மறுமையில் கணக்குத் தீர்க்கப்படும். அடுத்தவர்கள் பற்றி சொன்ன பொய்கள், அவதூறுகள், செய்த அநியாயங்கள் என அனைத்துக்கும் நிச்சயம் மறுமையில் கணக்குத் தீர்க்கப்படும். அது விசாரணை நாள். எந்தக் குற்றத்தையும் மறைக்க முடியாத நாள். அந்த நாளில் அல்லாஹ்விடம் மாட்டிக்கொள்ளாமல் இருக்க அநியாயம் வேண்டாம் கண்ணே! செய்த அநியாயங்களுக்கு இன்றே, இப்போதே உரியவர்களிடம் மன்னிப்புக் கேட்டு உங்களை நீங்கள் தூய்மைப்படுத்திக் கொள்ளுங்கள்.







# கண்ணேறு கலக்கம் வேண்டாம்

பெண்களுக்கும், மூட நம்பிக்கைகளுக்குமிடையில் ஏதோ பிரிக்க முடியாத பிணைப்பு உள்ளது. எல்லா மூட நம்பிக்கைகளினதும் ஏகபோக உரிமையாளர்களாக அவர்கள் திகழ்கின்றனர். இதற்கு சமூக, சமய ரீதியில் காரணங்கள் உள்ளன. அந்த விடயத்தில் ஆண்கள்தான் குற்றவாளிகளாக உள்ளனர் என்பதும் கசப்பான உண்மையாகும்.

**“கண்ணேறு உண்மையென்பது நபிமொழியாகும்.”**
*(புஹாரி: 5740, 5944)*

**“உம்மு ஸலமா(ரழி) அவர்கள் கூறுகின்றார்கள். நபி(ﷺ) எனது வீட்டில் ஒரு சிறுமியைப் பார்த்தார்கள். அவளுடைய முகத்தில் கருஞ் சிவப்பான படர்தாமரையொன்று இருந்தது. நபியவர்கள் இவளுக்கு ஓதிப்பாருங்கள். ஏனெனில் இவள் மீது கண்ணேறு பட்டிருக்கிறது என்று கூறினார்கள்.”**
*(புஹாரி: 5739)*

சகுனம், தாயத்து போன்ற அடிப்படையே இல்லாத மூட நம்பிக்கையாக கண்ணேறு இல்லையென்பது இதிலிருந்து புலப்படுகின்றது. கண்ணேறு உண்மை என்பது மார்க்க நிலைப்பாடு. எனவே, கண்ணேறு என்பது வெறும் மூடநம்பிக்கை அல்ல. எனினும் கண்ணேறு தொடர்பான சில தவறான போக்குகள் எமது பெண்களிடம் ஒட்டிக்கொண்டுள்ளன.

கண்ணேறு உண்மை என்பதற்காக எல்லாவற்றை யும் கண்ணூறுடன் கட்டிப் போட்டுக் கொண்டு கதைக்க முடியாது. எல்லா குழந்தைகளுக்கும் உணவு கொடுப்பதில் தாய்மார்களுக்குப் பெரிய தொல்லை உள்ளது. பெரும் கஷ்டப்பட்டுத்தான் உணவு ஊட்ட வேண்டியுள்ளது. இது இயல்பானது. ஆனால், விளையாட்டு, பசியின்மை, உணவில் நாட்டமின்மை, இனிப்பு அதிகமாக உண்பதால் பசியெடுக்காமை எனப் பல காரணங்களால் பிள்ளை உணவில் ஈடுபாடு காட்டாமல் இருக்கலாம். ஆனால், பிள்ளை உணவில் ஈடுபாடு காட்டாமைக்கு ஆயிரம் காரணங்கள் இருந்தாலும் சில தாய்மார்கள் "எந்த சனியண்ட கண் பட்டுத் தொலஞ்சிதோ தெரியாது! புள்ள சாப்பிடுதே இல்ல" என்று கூறுகின்றார்கள்.

சில போது "அன்றைக்குப் பிள்ளை சாப்பிடும் போது அந்தக் கிழவிதான் பார்த்தாள். அவள்ட கண் பட்டுத்தான் பிள்ளை சாப்பிடுதே இல்லை" என்று கூறுவார்கள்.

இவ்வாறே நன்றாகப் படிக்கக்கூடிய சில பிள்ளைகள் சில போது வீட்டில் தொலைக்காட்சியில் காலத்தைக் கழிப்பதாலும், விளையாட்டு, பெற்றோரின் கவனயீனம் போன்ற காரணங்களாலும் படிப்பில் பின்னடைவை எதிர்கொள்ளலாம். பிள்ளையின் பின்னடைவுக்கு என்ன காரணம் என்று கண்டு பிடித்து அதைக் களைவதை விட்டுவிட்டு "அண்டைக்கு அவள் வந்த நேரம் பிள்ளை பாட்டுப் படிச்சிச்சி. ஒங்கட புள்ள நல்லா பாட்டுப் படிக்குது! எங்கட புள்ளைக்கு ஒன்னும் சொல்லிக்கொடுத்தில்ல என்று சொல்லும் போதே நினைச்சேன், அவள்ற கண் பட்டதால என்ர புள்ள இந்த முறை படிப்புல வீக் ஆயிட்டான்" என்று கூறுவதைக் காணலாம்.



இப்படியே அனைத்துப் பிரச்சினைக்கும் கண்ணேறுதான் காரணம் என்று கற்பனை பண்ணும் பெண்களும் உள்ளனர். இது தவறான போக்காகும். ஊரில் உள்ளவர்களுக்கெல்லாம் உங்களது பிள்ளை, கணவன், அவர்களது படிப்பு, தொழில் இவற்றில் கண்படுவதை விட்டால் வேறு வேலையில்லையென்று அலைந்து திரிந்து கொண்டிருக்கின்றார்கள் என்று நினைக்கின்றீர்களா?

கண்ணேறு உண்மையென்பது தனி விடயம். அதற்காக எதையெடுத்தாலும் கண்ணூறைக் காரணம் காட்டுவதென்பது அறிவீனமாகும்.

மனிதனை சோதிப்பதற்காக, அவனது பாவங்களை நீக்குவதற்காக, சுவனத்தில் அவனது அந்தஸ்தை உயர்த்துவதற்காக... என பல காரணங்களுக்காக மனிதனுக்கு சில கஷ்டங்களை அல்லாஹ் சோதனையாக வழங்குவான். சில போது ஏற்படும் நோய்களுக்குக் காரணம் கண்டுபிடிக்க முடியாமல் போய்விடலாம். சில போது மருத்துவர்களே என்ன? எப்படி? எனத் தலையைப் பிய்த்துக்கொள்வர். ஆனால், எங்களது பெண்களுக்கு இதற்கெல்லாம் ரெடிமெட் காரணம் ரெடியாக இருக்கும். அது வேறொன்றுமில்லை, "ஏதேனும் கண்பட்டுத் தொலைந்திருக்கும். அதுதான் காரணம். வேறு ஒன்றும் இல்லை" என்று அடித்துக் கூறிவிடுவர்.

இது ஒரு புறம் என்றால் சில பெண்கள் அடுத்தவர்களது முன்னேற்றங்களைப் பொறாமைக் கண்ணுடன் பார்த்தே பழகி விட்டனர்.

ஒரு மரத்தில் மாங்காய் அதிகமாகக் காய்த்திருக்கிறது. பார்த்தால் "மாஷா அல்லாஹ்" என்று

கூற வேண்டும். ஆனால் இவர்களுக்குத்தான் அடுத்தவர்கள் நல்லா இருப்பது பிடிக்காதே! (ஆ....ஆ.... என்றொரு ஏக்கம்) “காய்ச்சிப் புழுத்துப் போயிருக்கிறது. இலைகளை விட காய்தான் அதிகம்! பாரம் தாங்க ஏலாம கொப்பு உடையப்பாக்குது!” என்பர்.

அதுதான் அந்த மரத்தில் காய்க்கும் கடைசி முறையாக இருக்கும். மரம் பட்டுப் போவதைப் பார்க்கின்றோம். சூறா கஹ்ப் 18 ஆம் அத்தியாயத்தில் ஒரு சம்பவம் கூறப்படுகின்றது.

இரண்டு நண்பர்கள். ஒருவருக்கு இரண்டு தோட்டங்கள். அவர் இறை நிராகரிப்பாளர். அவர் தனது தோட்டங்கள் பற்றிப் பேசும் போது இது அழியாது என அவரே பெருமையாகப் பேசிக்கொள்கின்றார். அவர் மறுநாள் வந்து பார்க்கும் போது தோட்டம் கருகிப்போயுள்ளது. இந்த சந்தர்ப்பத்தில் அவரது நண்பர் பின்வருமாறு கூறுகின்றார்.

**“நீ உன் தோட்டத்தில் நுழைந்த போது, ‘மாஷா அல்லாஹு லாகுவ்வத இல்லா பில்லாஹ்’ (அல்லாஹ் நாடியதே நடக்கும். சக்தி அனைத்தும் அல்லாஹ்வைத் தவிர வேறுயாருக்கும் இல்லை) என்று கூறியிருக்கக் கூடாதா? உன்னை விட என்னைப் பொருட் செல்வத்திலும் பிள்ளைச் செல்வத்திலும் குறைந்தவன் என நீ கருதியபோதிலும். எனது இரட்சகன் உனது தோட்டத்தை விட சிறந்ததை எனக்குத் தரவும், அத்துடன் வானத்திலிருந்து தண்டனையை அதற்கு அனுப்பவும் போதுமானவன். அதனால் அது வழுக்கக்கூடிய வெட்ட வெளியாக ஆகிவிடும்.**” *(18:39)*

எனவே, மகிழ்ச்சியைத் தரக்கூடிய ஒன்றைக் கண்டால் “மாஷா அல்லாஹ்” என்று கூற வேண்டும். இந்த



ஒழுங்கைக் கடைப்பிடிக்க வேண்டும். அடுத்தவர்கள் மீது பொறாமை கொள்வதைத் தவிர்க்க வேண்டும். அடுத்தவர்களுக்கு எம்மால் எந்தப் பாதிப்பும் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதில் கவனம் தேவை.

பிறரது கண்ணேறு எம்மீது படுவது போன்றே எமது கண்ணேறு எம்மீதோ எமது குழந்தைகள் மீதோ பாதிப்பை ஏற்படுத்திவிடலாம். சில தாய்மார்கள் பிள்ளைக்கு விளையாட்டுக் காட்டி நன்றாக உண்ணக் கொடுத்துவிட்டு மகிழ்ச்சி தாங்க முடியாமல் இன்றைக்குப் பிள்ளை நல்லா ஒரு பீங்கான் சாப்பிட்டான் என்று கூறுவர். சிலபோது இவர்களது கண்ணே பிள்ளைக்குப் பட்டுவிடலாம்.

எனவே, பிறர் மீது சந்தேகம் கொள்வதை விட்டு விட்டு நாம் சில அடிப்படைகளை உணர்ந்து செயற்பட வேண்டும்.

1. அல்லாஹ்வின் மீது தவக்குல் வைப்பதில் உறுதியாக இருக்க வேண்டும். அல்லாஹ்வின் நாட்டமின்றி எதுவும் நடக்காது. கண்ணேறு தாக்குவதென்றால் கூட அல்லாஹ்வின் நாட்டத்திற்கு அது உட்பட்டது என்ற நம்பிக்கையில் தளம்பல் ஏற்பட்டுவிடக் கூடாது.
2. எமது தேவைகள், பிரச்சினைகள் எதுவாக இருந்தாலும் அல்லாஹ்விடம் முறையிட வேண்டும். அவனிடம் கையேந்த வேண்டும். இதில் தளர்வோ, சோர்வோ ஏற்பட்டுவிடக் கூடாது.

3. பொறாமைக்காரன் பொறாமைப் படும் போது நேரும் தீங்குகளை விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகின்றேன் என அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுவது கட்டாயமாகும். “குல் அஊது பிரப்பின்

நாஸ், குல் அஊது பிரப்பில் பலக்” ஆகிய சூறாக்களை அடிக்கடி ஓதி வர வேண்டும்.

கண்ணேறின் தீங்கிலிருந்து குழந்தை களைப் பாதுகாப்பதற்காக நபி(ﷺ) அவர்கள் துஆச் செய்து வந்துள்ளார்கள்.

**“அல்லாஹ்வின் முழுமையான வார்த்தைகளைக் கொண்டு எல்லா ஷைத்தான்களிடமிருந்தும், விஷப் பிராணிகளிடமிருந்தும், தீய எண்ணத்துடன் தீண்டும் கண்ணேறிலிருந்தும் அவனிடம் நான் பாதுகாப்புத் தேடுகின்றேன் எனும் துஆ மூலம் ஹஸன், ஹுஸைன் (ؓ) அவர்களுக்காக நபியவர்கள் பாதுகாவல் தேடியுள்ளார்கள். இவ்வாறே இப்றாஹீம் (ؑ) அவர்கள் தமது புதல்வர்களான இஸ்மாஈல் (ؑ), இஸ்ஹாக் (ؑ) ஆகிய இருவருக்காகவும் துஆச் செய்ததாகவும் கூறினார்கள்.”**

*அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்(ؓ)*
*ஆதாரம்: புஹாரி: 3371)*

இது போன்ற துஆக்களை ஓதி அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடலாம்.

இவ்வாறே ஜிப்ரீல்(ؑ) அவர்கள் நபி(ﷺ) அவர்களுக்கு ஓதிய துஆவாக பின்வரும் துஆ பதிவாகியுள்ளது.

**“அல்லாஹ்வின் பெயர் கொண்டு உமக்குத் தொல்லை தரும் அனைத்தை விட்டும் பாதுகாக்குமாறு மந்திரிக்கின்றேன். எல்லா உயிரினங்களின் தீங்கை விட்டும், பொறாமைக்காரனின் கண்ணேறைவிட்டும்**



**அல்லாஹ் உமக்கு சுகமளிப்பானாக! அல்லாஹ்வின் பெயர் கூறி நான் மந்திரிக்கின்றேன்.”**

*அறிவிப்பவர்: அபூஸயீத்(ؓ)*
*ஆதாரம்: முஸ்லிம்- 5829, திர்மிதி- 972)*

எனவே, இது போன்ற துஆக்களை ஓதி வரலாம்.

## 4. குழந்தைகள் விடயத்தில் விழிப்புணர்வு தேவை:

**“இரவின் முற்பகுதி வந்துவிட்டால் அல்லது நீங்கள் மாலை நேரத்தை அடைந்தால் உங்கள் குழந்தைகளை (வெளியே அனுப்பாமல்) தடுத்து விடுங்கள். ஏனெனில் அப்போது ஷைத்தான்கள் (வெளியே) பரவுகின்றன. இரவில் சிறிது நேரம் கழிந்துவிட்டால் அவர்களை (சுதந்திரமாக வெளியே செல்ல) விட்டுவிடுங்கள். மேலும் (இரவு நேரத்தில்) கதவுகளைப் பூட்டிவிடுங்கள். அப்போது அல்லாஹ்வின் பெயரைச் சொல்லுங்கள். ஏனெனில் ஷைத்தான் மூடப்பட்ட கதவைத் திறக்கமாட்டான் என நபி (ﷺ) அவர்கள் கூறினார்கள்.”**

*அறிவிப்பவர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ்(ؓ)*
*ஆதாரம்: புஹாரி- 3304)*

எனவே, இது போன்ற பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்.

வீட்டினுள் நுழையும் போது பிஸ்மி கூறுதல், வீட்டில் அதிகமாக குர்ஆன் ஓதுதல், குறிப்பாக சூறதுல் பகரா ஓதுதல் போன்ற வழிமுறைகள் மூலம் ஆன்மீகரீதியான பாதுகாப்புக்களை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

கண்ணூறு கண்ணூறு எனக் கலங்குவதை விட இது ஏற்றமானதாகும்.

## குழந்தை வளர்ப்பில் கூடிய கவனம் செலுத்துங்கள்.

பெண்களின் பொறுப்புக்களில் முதன்மையானது குழநதையை இஸ்லாமிய நெறியில் பயிற்றுவிப்பது என்றால் அது மிகையாகாது. பெண்கள் குழந்தைகளால் நிறையவே சிரமங்களை சந்திக்கின்றனர் என்பது உண்மையே! ஆனால், உணவூட்டுதல், ஆடைகளைக் கழுவுதல், நீராட்டுதல், பாதுகாத்தல், மருத்துவம் செய்தல் என்பதெல்லாம் பொதுவான பொறுப்புக்கள். மிருகங்கள் கூட இதைச் செய்கின்றன. முஸ்லிம் பெண்களைப் பொறுத்தவரையில் தமது குழந்தைகளை அல்லாஹ்வின் பொருத்தத்திற்குரியவர்களாக வளர்த்தெடுப்பதென்பது முதன்மையான பணியாகும்.

இந்த அடிப்படையில் இங்கே குழந்தைகளின் ஆளுமையை வளர்த்தெடுப்பதற்கான ஒரு விரிவான விளக்கத்தை முன்வைக்க விரும்புகின்றோம். நல்ல பெண்களினூடாக நல்ல சந்ததிகளை உருவாக்குவதே உன்னதமான சமூக மாற்றத்திற்கு அடிப்படை என்ற சிந்தனையின் விளைவாகவே இது குறித்து விரிவாகப் பேசப்படுகின்றது.









# குழந்தைகளின் ஆளுமை விருத்திக்கு அழகிய வழிகாட்டல்

இஸ்லாமிய நெறியில் குழந்தை வளர்ப்பு எனும் போது அவர்களது லௌகீக நலன் நாடிய ஆளுமைகள் மட்டுமன்றி, அவர்களின் "ஹிதாயத்" எனும் ஆன்மீக ஆளுமை விருத்தியும் நோக்கமாகக் கொள்ளப்படும். இந்த வகையில் குழந்தைகளின் ஆன்மீக-லௌகீக முன்னேற்றத்திற்கு நபி(ஸல்) அவர்கள் கொடுத்த முக்கியத்துவம், அதற்காக அவர்கள் காட்டிய வழிமுறைகளை இங்கே சுருக்கமாகத் தொகுத்துத் தர விரும்புகின்றோம்.

## பிரார்த்தனை:

நபி(ﷺ) அவர்கள் தமது எதிரிகளின் குழந்தைகளின் எதிர்கால முன்னேற்றத்திற்காகக் கூடப் பிரார்த்தனை செய்துள்ளார்கள். இது எதிர்கால சந்ததிகளின் சீர் திருத்தத்திற்கு அவர்கள் வழங்கிய முக்கியத்துவத்திற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

நபி(ﷺ) அவர்கள் தாயிப் நகருக்குப் பிரச்சாரத்திற்குச் சென்ற போது, அம்மக்கள் நபி(ﷺ) அவர்களைத் துரத்தித் துரத்தித் தாக்கினர். நபி(ﷺ) அவர்களின் பொன்னான மேனியில் ஏற்பட்ட காயங்களிலிருந்து வடிந்த இரத்தத்தால் அவர்களின் பாதணிகள் தோய்ந்து போகும் அளவுக்குத் தாக்கப்பட்டார்கள்.

அப்போது அவர்கள் செய்த பிரார்த்தனை உருக்கமானதாகும். அப்போது அல்லாஹ்தஆலா

நபியவர்கள் விரும்பினால் அந்த மக்களை அழித்து விட மலைக்குப் பொறுப்பான மலக்கை அனுப்பினான்.

எனினும் நபி(ஸல்) அவர்கள்,

**"இவர்கள் இல்லாவிட்டாலும் இவர்களின் சந்ததிகளில் அல்லாஹ்வுக்கு எதையும் இணையாக்காமல் அவன் ஒருவனை மட்டும் வணங்குபவர்கள் உருவாக வேண்டும் என்றே நான் விரும்புகின்றேன்"** எனக் கூறினார்கள்.

தனது எதிரிகளின் குழந்தைகள் கூட அல்லாஹ்வை மட்டும் வணங்குபவர்களாக உருவாக வேண்டும் என நபி(ﷺ) அவர்கள் பிரார்த்தித்துள்ளார்கள். நாம், "நமக்குச் சந்ததி தேவை!", "எனக்குப் பேரப்பிள்ளை தேவை!", "எனக்கு ஆண் பிள்ளை தேவை!" என்றுதான் ஆசைப் படுகின்றோம்; அதற்காகத்தான் பிரார்த்திக்கின்றோம், நேர்ச்சை செய்கின்றோம். என்றாவது, ஒரு நாள் "அல்லாஹ்வுக்கு இணை வைக்காது!", "அவன் ஒருவனை மட்டுமே வணங்கும் சந்ததி தேவை!" என்று பிரார்த்தித்துள்ளோமா? எனச் சற்று சிந்தித்துப் பாருங்கள்!

நபி(ﷺ) அவர்கள் குழந்தையின் உருவாக்கம் ஷைத்தானியத்திலிருந்து உருவாகாமல், ஆன்மீகத்தின் அடிப்படையில் அமைய வேண்டும் என்று வழிகாட்டினார்கள்.

உங்களில் ஒருவர் தன் மனைவியிடம் தாம்பத்தியத்திற்காகச் சென்றால்

**"பிஸ்மில்லாஹ்! அல்லாஹும்ம ஜன்னிப்னஷ் ஷைத்தான வஜன்னிபிஷ் ஷைத்தான மா ரஸக்தனா"**

**பொருள்:- "யா அல்லாஹ்! எம்மை விட்டும், எமது (இந்த**



**உறவின் மூலம்) எமக்கு நீ வழங்கும் குழந்தையை விட்டும் ஷைத்தானைத் தூரப்படுத்துவாயாக!'**

என்று ஓதினால் அவர்களுக்குக் கிடைக்கும் குழந்தையை ஷைத்தான் அடைய மாட்டான் என்று கூறினார்கள்.

இந்த துஆவை ஓதி எமது சந்ததிகளை ஆன்மீகத்தின் அடித்தளத்தில் உருவாக்கினோமா? அல்லது ஷைத்தானின் அடிப்படையில் உருவாக்கி னோமா? என்பதை அனைவரும் ஒரு முறை சிந்தித்துப் பார்ப்பது சிறந்ததாகும்.

## கருவறைக் குழந்தைக்கும் துஆ:

கருவில் குழந்தை நீர்த் துளியாக இருக்கும் போதே நபி(ﷺ) அவர்கள் அதற்காகப் பிரார்த்தித்துள்ளார்கள்.

அபூதல்ஹா(ரழி) அவர்கள் பயணத்தில் இருக்கும் போது அவரது குழந்தை மரணித்து விட்டது. அவர் வீட்டுக்கு வந்ததும், அவரது மனைவி மரணச் செய்தியைக் கூறாது, அவருக்கு உணவளித்து, அன்று இல்லறத்திலும் ஈடுபட்டனர். ஈற்றில் மரணச் செய்தியைக் கூறினார்கள். இது குறித்து அபூதல்ஹா நபி(ﷺ) அவர்களிடம் கூறிய போது, 'உங்கள் இருவரின் இரவிலும் அல்லாஹ் அருள் செய்வானாக!' என்று பிரார்த்தித்தார்கள்.

நண்பரின் குழந்தை கருவில் உருவான போதே அதற்காகப் பிரார்த்தித்துள்ளார்கள். இந்தப் பிரார்த்தனையின் பலனை அவர் அடைந்தார் என்று வரலாறு கூறுகின்றது.

## கருவறையிலிருந்தே கரிசனை ஆரம்பம்:

இன்று "சிறுவர் உரிமை" பற்றிப் பலவாறு பேசுகின்றனர். குழந்தை கருவில் இருக்கும் போதே அதன் நலன் குறித்து நபி(ﷺ) அவர்கள் அக்கறை செலுத்தியுள்ளார்கள். இஸ்லாமிய சட்ட வரையறைகளும் இதை எமக்கு உணர்த்துகின்றன.

## தண்டனையைத் தள்ளிப் போடல்:

ஒரு பெண் தண்டனைக்குரிய குற்றத்தைச் செய்து அவள் கர்ப்பிணியாகவும் இருந்தால், குழந்தையின் நலன் நாடி அவளது தண்டனை தள்ளிப் போடப்படும்.

ஒரு பெண் தான் விபச்சாரம் செய்ததாகவும், அதனால் தான் கருவுற்றுள்ளதாகவும் கூறுகின்றாள். நபி(ﷺ), அவளுக்குத் தண்டனையளிக்காது 'குழந்தையைப் பெற்று விட்டு வா!' என்கின்றார்கள். பெண்ணின் பொறுப்புதாரியை அழைத்து, 'இந்தப் பெண்ணுடன் நல்ல முறையில் நடந்துகொள்ள வேண்டும்!' என்றும் கூறுகின்றார்கள்.

அந்தப் பெண், குழந்தையைப் பெற்ற பின்னர் வந்த போது குழந்தை பால் மறந்ததன் பின்னர் வரச் சொன்னார்கள். குழந்தைக்குப் பால் மறந்து ரொட்டி உண்ணும் பருவத்தில் அந்தப் பெண் வந்த போது அவளுக்குத் தண்டனை அளிக்கப்பட்டது.

தாய் செய்த தவறுக்குத் தண்டனை அளிக்கும் போது, தவறுடன் சம்பந்தப்படாத குழந்தை பாதிக்கப்பட்டு விடக் கூடாது என்பதில் நபியவர்கள் காட்டிய அக்கறை இந்த ஹதீஸ் மூலம் தெளிவாகின்றது. அத்துடன் குழந்தையின் தாய்ப்பால் அருந்தும் உரிமைக்கு இஸ்லாம்



கொடுத்த முக்கியத்துவமும் இங்கு தெளிவாகின்றது. ஆனால் இன்றைய சூழலில் ஒரு தாய் தவறு செய்து விட்டு தனது தவறுக்குக் கருவறையையே கல்லறையாக்கிக் குழந்தையைக் கொல்கிறாள். பெற்ற பிள்ளையைக் காட்டிலும், கழிவு நீர் ஓடும் காண்களிலும் வீசி எறிகிறாள். கழுத்தை நெரித்துக் கொல்கிறாள். குற்றம் செய்தவள் தப்புவதற்காக எவ்விதக் குற்றமுமற்ற குழந்தைகள் கொல்லப்படும் கொடூரம் தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றது.

## கடமைகளை நீக்குதல்:

இஸ்லாம் விதித்த கடமைகள் சிலவற்றைக் கூட குழந்தை நலன் நாடித் தாய்க்கு இஸ்லாம் நீக்கி விடுகின்றது. ஒரு பெண் கர்ப்பிணியாக இருந்து அல்லது பாலூட்டும் தாயாக இருந்து, தான் நோன்பு நோற்பதால் குழந்தைக்குப் பாதிப்பு ஏற்படும் எனில் அவள் நோன்பை விட்டு விட இஸ்லாம் அனுமதித்துள்ளது. இவ்வாறே ஜமாஅத் தொழுகை நடக்கும் போது குழந்தைகளின் அழுகுரல் கேட்டால் நபி(ஸல்) அவர்கள் ஓதுவதைச் சுருக்கி விடுவார்கள் என்பதை ஹதீஸ் மூலம் அறிகிறோம்.

## சலுகை அளித்தல்:

ஒரு பெண்ணை அவளது கணவன் முதல் இரு தலாக் கூறினால், அவளுக்கு இத்தாக் காலம் முடியும் வரை செலவு கொடுக்க வேண்டும். மூன்றாம் தலாக் கூறி விட்டால் செலவு கொடுக்க வேண்டியதில்லை. இருப்பினும் மூன்றாம் தலாக் கூறப்பட்ட பெண் கர்ப்பிணியாக இருந்தால், குழந்தையைப் பெற்றெடுக்கும் வரை அவளுக்கு அவன் வாழ்வாதாரம் அளிக்க வேண்டும் என்பது இஸ்லாத்தின் சட்டமாகும். இது 'சிறுவர் உரிமை' கருவறையில் இருந்தே ஆரம்பிக்கின்றது என்பதையும்,

சிறுவர் நலனில் இஸ்லாம் எவ்வளவு அக்கறை செலுத்துகின்றது என்பதையும் தெளிவுபடுத்துகின்றது.

## ஆணோ, பெண்ணோ குழந்தை என்பது அருளே!:

சிலர் பெண் குழந்தையென்றதும் முகம் சுளிக்கின்றனர். குழந்தை ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் அல்லாஹ்வின் மிகப் பெரும் அருள்தான் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். குழந்தைப் பராமரிப்பில் ஆண்-பெண் பேதம் என்பது இருக்கவே கூடாது.

சிலர் "அதிக குழந்தை அபாக்கியம்!" என எண்ணி, உருவான கருவையும் கலைத்து விடத் துடிக்கின்றனர். அல்குர்ஆன் குழந்தை பற்றிக்கூறும் இடங்களில் நற்செய்தி *(19:7, 11:61, 16:59)* என்றே கூறுகின்றது. எனவே, குழந்தைச் செல்வத்தைப் பாக்கியமாகப் பார்க்க வேண்டும். ஆண், பெண் பேதம் பார்க்கலாகாது.

## நபிகளாரின் தஹ்னீக்:

நபி(ﷺ) அவர்கள் குழந்தைகள் விடயத்தில் காட்டிய அக்கறையைத் தெளிவுபடுத்தும் அம்சங்களில் இதுவும் ஒன்றாகும். "தஹ்னீக்" என்பது ஈத்தப்பழம் அல்லது இனிப்பான ஒரு பொருளை வாயில் மென்று மென்மைப்படுத்தி பிறந்த குழந்தையின் வாயில் வைப்பதைக் குறிக்கும். நபி(ﷺ) அவர்கள் இவ்வாறு குழந்தைகளுக்குச் செய்து அவர்களின் பரகத்திற்காக துஆவும் செய்துள்ளார்கள். இவ்வாறு இனிப்பூட்டுவது குழந்தைகளுக்கு நலனளிக்கின்றது என்றும் அவர்களின் தாங்கும் சக்தியை அதிகரிக்கின்றது என்றும் நவீன மருத்துவம் கூறுகின்றது.



## விபச்சாரத்தில் பிறந்த குழந்தை என்றாலும் உரிமை பறிக்கப்படக்கூடாது:

நபி(ﷺ) அவர்கள் குழந்தைகளின் உரிமை விடயத்தில் அவதானமாக நடந்துகொள்ளுமாறு ஏவியுள்ளார்கள். ஏற்கனவே நாம் குறிப்பிட்ட ஹதீஸில் விபச்சாரத்தில் பிறந்த ஒரு குழந்தை என்றாலும் அல்லாஹ்வின் தண்டனையை நிறைவேற்றுவதால் கூட தாயின் பாலைக் குடிக்கும் உரிமையை இழந்துவிடக் கூடாது என்பதிலே கரிசனை காட்டியுள்ளார்கள்.

## அகீகா வழங்குதல்:

குழந்தையின் ஆன்மீக ஆளுமையையும் அல்லாஹ்வின் அருளையும் பெற அகீகா எனும் விருந்தோம்பல் வழி செய்கின்றது.

**"நாம் ஜாஹிலிய்யாக் காலத்தில் குழந்தை பிறந்தால் ஆட்டை அறுத்து அதன் இரத்தத்தைக் குழந்தையின் தலையில் பூசுவோம். இஸ்லாம் வந்த பின்னர் ஆட்டை அறுத்துப் பகிர்வோம். குழந்தையின் தலையை மழித்து அதற்கு குங்குமத்தைப் பூசுவோம்"** என அபூபுரைதா (ؓ) அவர்கள் கூறியுள்ளார்கள். எனவே, குழந்தை பிறந்து 7 ஆம் நாளில் ஆட்டை அறுத்து விருந்து வழங்குதல் அல்லது மாமிசத்தைப் பகிர்தல் நபிவழியாகும்.

**"ஒவ்வொரு குழந்தையும் ஆகீகாவுக்கு அடகு வைக்கப்பட்டுள்ளது. ஏழாம் நாளில் அதற்காக அறுக்கப்பட்டு தலை மழிக்கப்படும். குழந்தைக்குப் பெயர் சூட்டப்படும் என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்."** (திர்மதி, நஸஈ)

எனவே அகீகா வழங்கி அல்லாஹ்வின் அருளைப் பெறுவதும் குழந்தை வளர்ப்புடன் சம்பந்தப்பட்டதாகும்.

## அழகிய பெயர் சூட்டல்:

குழந்தைகளுக்குச் சூட்டப்படும் பெயர்கள் அழகானதாக இருக்க வேண்டும். நல்ல அர்த்தம் கொண்டதாகவும், அசிங்கமான அர்த்தம் அற்றதாகவும் இருக்க வேண்டும்.

குழந்தைகளின் பெயர்கள் வித்தியாசமாக அமைந்து விட்டால் அதுவே அவர்களுக்குப் பட்டப் பெயராக மாறி விடும். தனது தரக்குறைவான பெயரைக் கூறும் போதே அவன் கூனிக் குறுகிக் குற்ற உணர்வுடன் வாழும் நிலை உருவாகும். எனவே பெயர் அழகாகவும், நல்ல அர்த்தமுடையதாகவும், எடுப்பாகவும் இருக்க வேண்டும்.

**"நபிமார்களின் பெயர்களைச் சூட்டுங்கள். உங்கள் பெயர்களில் அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமானது 'அப்துல்லாஹ்', 'அப்துர்ரஹ்மான்' என்பதாகும். ஹாரிஸ் - உழைப்பாளி, 'ஹம்மாம்' - முயற்சிப்பவன் என்பன மிகவும் உண்மையானவையாகும். 'ஹர்ப்' (போர்), 'முர்ரா' (கசப்பு) என்பன மிகவும் வெறுக்கத்தக்கவையாகும்" என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்."**

(அறிவிப்பவர்: இப்னு உமர்(ﷺ)
ஆதாரம்: அபூதாவூத், நஸாஈ)

இவ்வாறே சில பெயர்களைக் குறிப்பிட்டு அந்தப் பெயர்களை வைக்க வேண்டாம் என்றும் நபி(ﷺ) அவர்கள் கூறியுள்ளார்கள்.

எனவே, குழந்தைகளுக்குப் பெயர் சூட்டும் போது விழிப்புடன் இருக்க வேண்டும். இன்று சிலர் தமது பிள்ளைகளின் பெயர் ஆங்கில உச்சரிப்புக்கு **style** ஆக இருக்க வேண்டும் என்று விரும்புகின்றனர். ஆயினும் அதன் அர்த்தம் பற்றி அவர்கள் அலட்டிக்கொள்வதில்லை.



ஆரம்ப காலத்தில் இருந்தது போல் நபிமார்களின் பெயர்களைச் சூட்டும் வழக்கமும் அருகி வருகின்றது. அவை பழைய பெயர்களாகப் பார்க்கப்படுகின்றன. இவ்வாறே முக்கிய ஸஹாபாக்களின் பெயர்கள் கூட பழைய பெயர் என்ற காரணத்தால் புறக்கணிக்கப்படுவதையும் அவதானிக்கலாம். இதனால் இஸ்லாமிய வரலாற்றை மறந்த சந்ததிகளாக எதிர்கால சந்ததியினர் மாறும் அபாயம் உள்ளது.

## சிகை அலங்காரத்தில் கவனம் செலுத்துதல்:

நபி(ﷺ) அவர்கள் குழந்தை பிறந்து 7 ஆம் நாளில் அதன் தலைமுடி மழிக்கப்பட வேண்டும் என்று கூறுகின்றார்கள். இதன் மூலம் குழந்தையை விட்டும் தொல்லைகள் அகற்றப்படும் என்றும் கூறுகின்றார்கள். இவ்வாறான நிலையில் கைக் குழந்தைகளுக்கு மொட்டை அடிப்பது அதற்கு இராகத்தையும், சுகத்தையும் அளிக்கும்.

வளர்ந்த சிறுவர்-சிறுமியர் என்றால், "சிறுவர் தானே!" என அவர்களின் சிகை அலங்காரத்தில் கவனம் செலுத்தாது இருக்க முடியாது. அவர்களின் தோற்றம் கோமாளித்தனமானதாகவோ, வெகுளித்தனத்தை வெளிப்படுத்துவதாகவோ அமைந்து விடக் கூடாது. இது அவர்களின் ஆளுமையைப் பாதிக்கும். தன்மானச் சிக்கலை உண்டுபண்ணும்.

**'இப்னு உமர்(ﷺ) அவர்கள் இது குறித்துக் கூறும் போது, நபி(ஸல்) அவர்கள் 'அல்கஸஃ'வைத் தடுத்தார்கள் என்று குறிப்பிட்டார்கள். 'அல்கஸஃ' என்றால் என்ன? எனக் கேட்ட போது, 'சிறுவர்களின் தலையில் ஒரு பகுதியைச் சிரைத்து, மறுபகுதியை விட்டு விடுவதாகும்' எனக் குறிப்பிட்டார்கள்."**

(புகாரி, முஸ்லிம்)

## பிள்ளைகளின் பெயரால் புனைப்பெயர் சூட்டல்:

ஒருவருக்கு அப்துல்லாஹ் என்றொரு குழந்தை இருந்தால், அவர் தன்னை அபூ அப்துல்லாஹ் என அடையாளப்படுத்திக்கொள்வதை இது குறிக்கும். இது குழந்தையிடத்தில் மாற்றத்தை ஏற்படுத்தும்.

எனது பெயரால்தான் என் தந்தை அறியப்படுகின்றார் என அறியும் போது, தான் தவறு செய்தால் தனது குடும்பத்தின் பெயர் கெட்டு விடும் என்ற உணர்வை ஏற்படுத்தும். நபி(ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதராக இருந்தும் கூட அவரது மகன் காசிமின் பெயரால் அபுல் காசிம் என அழைக்கப்பட்டுள்ளார்கள்.

அபூ ஷுறைஹ்(ﷺ) அவர்கள் கூறுகின்றார்கள். "**தாம் வெளியூரில் இருந்து நபி(ﷺ) அவர்களைச் சந்திப்பதற்காகத் தமது தூதுக்குழுவினருடன் வந்திருந்த வேளை எனது கூட்டத்தினர் என்னை அபுல் ஹகம் (அறிவின் தந்தை) என அழைப்பதை நபி(ﷺ) அவர்கள் செவியுற்றார்கள். உடனே நபி(ﷺ) அவர்கள் என்னை அழைத்து, 'அல்லாஹ்தான் ஞானம் மிக்கவன். அவனிடமே அனைத்து ஞானங்களும் மீளும். எனவே, நீ உன்னை 'அபுல் ஹகம்' என்று புனைப் பெயர் சூட்டிக்கொள்ளாதே!' என்றார்கள். அதற்கு நான், 'அல்லாஹ்வின் தூதரே! எனது கூட்டத்தினருக்கு மத்தியில் ஏதேனும் கருத்து வேறுபாடு ஏற்பட்டால் என்னிடம் வருவார்கள். நான் அளிக்கும் தீர்ப்பை இரு சாராரும் திருப்தியுடன் ஏற்பார்கள்!' என்று கூறினேன். இது கேட்ட நபி(ﷺ) அவர்கள், 'இது எவ்வளவு அழகான விடயம்!' என்று கூறி விட்டு, 'உனக்குக் குழந்தைகள் இருக்கின்றார்களா?' எனக் கேட்டார்கள். ஷுரைஹ், முஸ்லிம், அப்துல்லாஹ் என்று மூவர் உள்ளனர்!' என்றேன். 'அவர்களில் மூத்தவர் யார்?' என நபி(ﷺ) அவர்கள் கேட்டார்கள். நான், ஷுரைஹ்!' என்றேன். 'அப்படியாயின் நீ அபூஷுரைஹ்!' என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.**" (அபூதாவூத்)



எனவே, குழந்தைகளின் பெயரைக் கொண்டு தந்தை "அபூ" என்றும், தாய் "உம்மு" என்றும் அழைக்கப்படுவது குழந்தைகளுக்கும் குடும்பத்திற்குமிடையில் நெருக்கத்தை உண்டுபண்ணுவதுடன் அவர்களிடத்தில் பொறுப்புணர்ச்சி யையும் ஏற்படுத்தும்.

## கத்னாச் செய்தல்:

ஆண் குழந்தைகளுக்கு "கத்னா" செய்வது குழந்தையின் ஆன்மீகத்திற்கும், ஆண்மைக்கும், ஆரோக்கியத்திற்கும் ஊக்கமளிக்கும் ஒரு முக்கிய ஸுன்னாவாகும். ஆண்களுக்குப் போன்று பெண் பிள்ளையின் "கத்னா" அவசியப்படுத்தப்படவில்லை. ஆனால் பெரும் தடை என்று கூறுவதற்கும் இல்லை.

சில நாடுகளில் பெண் பிள்ளைகளுக்குக் கூடப் பத்து வயது தாண்டிய பின்னர் "கத்னா"ச் செய்யும் வழக்கமுள்ளது. இதனால் சிலபோது பாரிய பாதிப்புக்களும் ஏற்படுகின்றன. இந்நடைமுறைகள் நமது நாட்டில் இல்லை என்பது திருப்தி தரும் அம்சமாகும்.

முன்னைய காலங்களில் ஆண் பிள்ளைகளுக்குச் செய்யும் "கத்னா"வையும் "ஸுன்னத்துக் கலியாணம்" என்ற பெயரில் பெரும் அளவு விழாவாக எடுப்பதும், "கத்னா"வை முன்னிட்டுப் பல்வேறுபட்ட சடங்குகளை அரங்கேற்றுவதும் வழக்கமாக இருந்தது. எனினும் மார்க்க அறிவு வளர்ச்சி, பொருளாதார நெருக்கடி, மருத்துவ முன்னேற்றம் என்பன இந்நிலையை மாற்றி குழந்தை பிறந்த சில நாட்களிலேயே மருத்துவர் மூலம் 'கத்னா'வை சர்வ-சாதாரணமாகச் செய்து விடும் வழிமுறை வளர்ந்து வருவது வரவேற்கப்பட வேண்டிய அம்சமாகும்.

## குழந்தைகளினால் ஏற்படும் சிரமங்களை சகித்தல்:

சில பெற்றோரும், பெரியவர்களும் குழந்தைகள் சிறுநீர் கழிப்பர்; அசுத்தமாக இருப்பர் என்பதால் அவர்களைத் தூக்கிக் கொஞ்சுவதில்லை. அவர்களுடன் நெருக்கமாக இருப்பதும் இல்லை. இது தவறாகும்.

**"ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நபி (ﷺ) அவர்களிடம் குழந்தைகள் அழைத்து வரப்படுவார்கள். நபியவர்கள் அக்குழந்தைகளுக்காக 'துஆ'ச் செய்வார்கள். ஒரு ஆண் குழந்தை நபியவர்களிடம் கொண்டு வரப்பட்டது. நபியவர்களின் ஆடையில் அக்குழந்தை சிறுநீர் கழித்துவிட்டது. நபியவர்கள் அந்த இடத்தில் தண்ணீர் தெளித்தார்கள். அதைக் கழுவவில்லை."** (முஸ்லிம்)

**"நபி (ﷺ) அவர்களிடம் ஒரு ஆண் குழந்தை கொண்டு வரப்பட்டது. நபி (ﷺ) அவர்கள் அக்குழந்தையைத் தூக்கிய போது அது நபி (ﷺ) அவர்கள் மீது சிறுநீர் கழித்து விட்டது. நபி (ﷺ) அவர்கள் சிறுநீர் பட்ட தமது ஆடையில் நீரைத் தெளித்தார்கள். பின்னர் ஒரு பெண் குழந்தை கொண்டு வரப்பட்டது. அக்குழந்தையும் நபி (ﷺ) அவர்கள் மீது சிறுநீர் கழித்த போது நபி (ﷺ) அவர்கள் ஆடையில் சிறுநீர் பட்ட இடத்தைக் கழுவினார்கள்."** (அஹ்மத்)

நபி(ﷺ) அவர்களின் அடிமையாக இருந்த ஸைத்(ؓ) அவர்களது மகன் உஸாமா(ؓ) அவர்கள் பார்ப்பதற்குக் கண்ணங்-கரேர் என்று இருப்பார். இவருடைய தாயார் ஒரு "நீக்றோ" அடிமையாவார்கள். நாம் அழகான பிள்ளைகள் மீதுதான் அன்பைச் சொரிவோம். அவர்களைத்தான் அள்ளி அணைப்போம். ஆனால் நபி(ﷺ) அவர்கள் பார்க்கப் பிடிக்காத பிள்ளைகளுடனும் பாசத்தைப் பொழிந்து பழகுவார்கள்.



இந்த உஸாமா(ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்.

**"நபி (ﷺ) அவர்கள் என்னைத் தூக்கி அவர்களது ஒரு மடி மீதும், நபி (ﷺ) அவர்களது பேரன் ஹஸன் (ؓ) அவர்களைத் தூக்கி ஒரு மடியிலும் அமர்த்தி, பின்னர் எம்மிருவரையும் அணைத்துக் கொண்டு,**

**'யா அல்லாஹ்! இவ்விருவர் மீதும் நீ கருணை காட்டுவாயாக! நானும் இவ்விருவர் மீதும் அன்பு காட்டுகின்றேன்' எனப் பிரார்த்தித்தார்கள்."** (புகாரி)

எனவே, குழந்தைகளுடன் நெருங்கிப் பழக வேண்டும். அவர்களை மடியில் அமர்த்துவது, தூக்குவது, அவர்கள் மீது அன்பை வெளிப்படுத்துவது என்பன குழந்தைகளின் ஆளுமை விருத்திக்குப் பெரிதும் உதவும். நாம் பாதுகாப்பான, அன்பான சூழலில் வாழ்கின்றோம் என்ற உணர்வு அவர்களுக்குப் பெரிதும் உத்வேகம் அளிக்கும்.

## கண்ணியப்படுத்துவதும், கண்ணியமாக நடத்துவதும்:

குழந்தைகளைப் பெற்றோரும், பெரியோரும் கண்ணியப்படுத்த வேண்டும். அவர்களுடன் கண்ணியமாகப் பழக வேண்டும். இதன் மூலம் கண்ணியமான நடத்தைகளைப் பிள்ளைகள் பழகிக் கொள்வார்கள். அவர்களை அவர்களுக்கென்றே உள்ள பெயர்கள் கொண்டு அழைப்பதும் அவர்களுக்கு உட்சாகமூட்டும் அத்துடன் மகிழ்வளிக்கும்.

நபி(ﷺ) அவர்கள் அபூதல்ஹா(ؓ) அவர்கள் வீட்டுக்கு அடிக்கடி செல்வார்கள். அவர்களது மகன் அபூஉமைரை நபி(ﷺ) அவர்கள் மிக அன்புடன் "யா அபா

உமைர்!" என அழைப்பார்கள். இந்த அபூஉமைர் ஒரு குருவி வளர்த்து வந்தார். அது இறந்த போது பெரிதும் கவலைப்பட்டார். நபி(ﷺ) அவர்கள் இதை அறிந்து, "யா அபா உமைர்! **மா பஅலன் னுஅய்ர்?**" (அபூ உமைரே! உங்கள் குருவிக் குஞ்சுக்கு என்னவானது) என இலக்கிய நயம் கொஞ்ச அவரிடம் பேசி அவரை மகிழ்வித்தார்கள்.

எனவே, சிறுவர்களைச் "சின்னப் பிள்ளைகள் தானே!" எனக் குறைத்து மதிப்பிடும் வகையில் அழைக்காமல் அவர்களை கௌரவித்தே அழைக்க வேண்டும். இது அவர்களுக்குள்ளேயே "நாம் கௌரவமானவர்கள்" என்ற உணர்வை ஊட்டும். இதன் மூலம் அவர்களது ஆளுமை வளர்வதுடன் தமது கௌரவத்தையும், கண்ணியத்தையும் பாதுகாக்க வேண்டும் என்பதால் பண்பாட்டுடன் நடக்க முற்படுவர்.

எனவேதான் அடிமைச் சிறுவர்களை "அடிமை" என அழைக்காமல், "குலாம்" (சிறுவனே!) என அழைக்குமாறு நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (முஸ்லிம்)

## நெருக்கமான, இறுக்கமான உறவு:

நபி(ﷺ) அவர்கள் அனைத்துச் சிறுவர்-சிறுமியருடனும் நெருக்கமான உறவு கொண்டிருந்தார்கள். சிறுவர்களைச் சந்திக்கும் போது ஸலாம் கூறுவார்கள். அவர்களுடன் உரையாடுவார்கள். அவர்களுக்கு "துஆ"ச் செய்வார்கள். சிறுவர்கள் உரிமையுடன் தன்னுடன் பழகுவதற்கு இடமளிப்பார்கள். இந்த உறவின் நெருக்கத்தின் காரணமாக தொழும் போது கூடக் குழந்தைகளைச் சுமந்து கொண்டு தொழுதுள்ளார்கள்.

"**அபூகதாதா அல்அன்ஸாரி(ரழி) அவர்கள் கூறுகின்றார்கள். உமாமா(ﷺ) அவர்களைச் சுமந்து கொண்டு**



**தொழுபவராக நபி(ﷺ) அவர்கள் இருந்தார்கள். (உமாமா நபியவர்களது பேத்தியாவார்கள். நபியவர்களின் மகள் ஸைனப் அவர்களது குழந்தையே உமாமாவாகும்.) ஸுஜூது செய்யும் போது பிள்ளையைக் கீழே வைப்பார்கள். எழும் போது சுமந்து கொள்வார்கள்.**" (புகாரி)

நபி(ﷺ) அவர்கள் சிறுவர்-சிறுமியருடன் நெருக்கமாகவும், அன்பாகவும் பழகியதுடன் அவர்களுடன் விளையாடவும் செய்தார்கள். குழந்தைகளை முதுகில் ஏற்றிக் குதிரைச் சவாரி எனத் தானே தவழ்ந்து அவர்களை மகிழ்விப்பார்கள். இதனால் பழக்கப்பட்ட நபிகளாரின் பேரர் ஹஸன் அல்லது ஹுஸைன் ஒரு முறை நபி(ﷺ) அவர்கள் தொழுகையில் ஸுஜூதில் இருக்கும் போதே அவர் சவாரிக்கத் தயாராகின்றார் என எண்ணி அவரின் முதுகில் ஏறிய சம்பவங்களும் உள்ளன.

"**நபி(ﷺ) அவர்கள் ஒரு மஃரிப் அல்லது இஷாத் தொழுகையின் போது நீண்ட நேரம் ஸுஜூது செய்தார்கள். தொழுகை முடிந்ததும் 'அல்லாஹ்வின் தூதரே! என்றுமில்லாதவாறு நீண்ட நேரம் ஸுஜூது செய்தீர்கள். உங்களுக்கு வஹீ வருகின்றதோ! என நாம் நினைத்தோம். அல்லது ஏதோ நடந்து விட்டதோ! என எண்ணினோம் எனக் காரணங்களைக் கூறினர். அதற்கு நபி(ﷺ) அவர்கள் 'அப்படி ஒன்றுமில்லை. எனது பேரன் என் முதுகில் ஏறி விட்டார். அவர் தானாக இறங்கும் வரை நானாக எழுந்து அவருக்கு அதிர்ச்சியூட்டுவதை நான் வெறுத்தேன்' (எனவேதான் தாமதித்தேன்) எனக் கூறினார்கள்.**"

(ஹதீஸின் சுருக்கம் – நஸாஈ, அஹ்மத்)

இந்த ஹதீஸ், நபி(ﷺ) அவர்கள் குழந்தைகளுடன் எவ்வளவு நெருக்கமான உறவை வைத்திருந்தார்கள் என்பதை எடுத்துக் காட்டுகின்றது.

அத்துடன் நபி(ﷺ) அவர்கள் குழந்தைகளுடன் பழகும் போது தானும் ஒரு குழந்தையாக மாறி, அவர்களுடன் விளையாடி இருப்பதையும் எடுத்துக் காட்டுகின்றது. அடுத்து, ஒரு குழந்தையை அதிர்ச்சியடையச் செய்யக் கூடாது என்பதற்காக ஒரு ஜமாஅத்துத் தொழுகையின் ஸுஜூதையே நபியவர்கள் நீட்டியுள்ளார்கள். எனவே குழந்தைகளை அதிர்ச்சியடையச் செய்வதோ, பயமூட்டுவதோ தவறு என்பதையும் இது எடுத்துக் காட்டுகின்றார்கள். எமது தாய்மார்கள் குழந்தைகளைத் தூங்க வைப்பதற்காகவும், உண்ண வைப்பதற்காகவும் "நாய் வருகிறது!", "பேய் வருகிறது!" எனப் பயமூட்டி அவர்களின் ஆளுமைகளைச் சிதைத்து விடுகின்றனர். இது தவறாகும்.

நபி(ﷺ) அவர்கள் சிறுவர்களைத் தோளில் சுமப்பார்கள். இது அவர்களுக்குப் பெரிதும் மகிழ்வளிக்கும்.

**"நபி(ﷺ) அவர்களது தோளில் ஹஸன்-ஹுஸைன் அவர்களிருவரும் இருந்தனர். இதைப் பார்த்த நான் 'பாக்கியம் பெற்ற குதிரையில் சவாரி செய்கின்றீர்கள்!' என்றேன். இது கேட்ட நபி(ﷺ) அவர்கள் 'சவாரி செய்பவர்களும் பாக்கியம் பெற்றவர்கள்தாம்!' எனக் கூறினார்கள் என உமர்(ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்."**

(தபரானி, முஸன்னப் இப்னு அபீஷைபா)

நபி(ﷺ) அவர்கள் குழந்தைகளுடன் குழந்தையுணர்வுடன் பழகியிருப்பதை இந்த ஹதீஸும் உணர்த்துகின்றது.

**"அபூபுரைதா(ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நபி(ﷺ) அவர்கள் குத்பா உரை நிகழ்த்தும் போது அவர்களது பேரர் ஹஸன்-ஹுஸைன்(ரழி) ஆகிய இருவரும் சிவப்பு நிற ஆடை அணிந்து தத்தித் தத்தி வந்தனர். உடனே நபி(ﷺ) அவர்கள் மிம்பரை விட்டும் இறங்கி இரு சிறுவர்களையும் சுமந்து மிம்பரில் அமர வைத்து விட்டு 'அல்லாஹ் உண்மை உரைத்து விட்டான்' என்று கூறி, 'நிச்சயமாக உங்களது செல்வங்களும், குழந்தைகளும் சோதனைதாம்' (தகாபுன்:15) என்ற வசனத்தை ஓதினார்கள். பின்னர் 'நான் இந்த எனது பிள்ளைகளைப் பார்த்தேன். அவர்கள் தத்தித் தத்தி வந்தனர். என்னால் அவர்களைச் சுமந்து இங்கே அமர்த்தும் வரை பேச்சைத் துண்டிக்காது பொறுமையாக இருக்க முடியவில்லை' எனக் கூறினார்கள்."** (திர்மிதி, இப்னுமாஜா, அஹ்மத்)

குத்பாவைத் துண்டிக்கும் அளவுக்கு நபி(ﷺ) அவர்கள் அந்தச் சிறுவர்களுடன் நெருக்கமாகவும், அன்பாகவும் பழகியிருப்பதை இந்த ஹதீஸ் எடுத்துக் காட்டுகின்றது.

எமது பெற்றோர்களில் சிலர் சிறுவர்களுடன் நெருங்கிப் பழகக் கூடாது என்ற எண்ணத்தில் உள்ளனர். இது தவறாகும். நெருங்கிப் பழகுவதுடன் அவர்களுக்கு நேரிய-சீரிய வழியையும் காட்ட வேண்டும்.

## அவர்களுடன் சேர்ந்து உண்பதும், ஒழுங்குகளைக் கற்றுக் கொடுப்பதும்:

குடும்பத்தில் அனைவரும் ஒன்றாக இருந்து உண்பது சிறந்த பண்பாகும். இந்தப் பண்புகள் இன்று அருகி விட்டன. அதனால் பாரிய ஒழுக்க வீழ்ச்சிகள் ஏற்பட்டு வருகின்றன. கடந்த காலங்களில் குடும்பத்தில் ஒருவர் இல்லாவிட்டாலும் உணவு உண்ணப்பட மாட்டாது. அவர் தேடப்படுவார். இப்போது அப்படி இல்லை. மேசையில் உணவு இருக்கும். அவரவர் எடுத்து உண்ண வேண்டியதுதான். இப்படி உண்ணும் போது பாசத்தையும்,

அன்பையும் பகிர்ந்துகொள்ள முடியாது. அடுத்தவர் தேவை அறிந்து விட்டுக் கொடுத்து வாழும் பண்பு ஏற்படாது. எனவே, குறைந்த பட்சம் இரவு உணவையாவது எல்லோரும் ஒன்றாக இருந்து உண்ணப் பழக வேண்டும். இந்தப் பழக்கம் உண்டாகி விட்டால் இளைஞர்கள் இரவு நேரங்களில் வீணே வீதிகளில் நேரத்தைக் கழிக்க மாட்டார்கள். 'நான் வீட்டுக்குச் செல்லும் வரை வீட்டில் தாயோ, தந்தையோ உண்ண மாட்டார்கள்' என்கிற உணர்வு அவனை வீட்டிற்கு விரட்டும்.

“நான் எப்போது வேண்டுமானாலும் போகலாம். வீட்டு மேசையில் உணவிருக்கும். உண்டு விட்டு உறங்கலாம்” என்ற உணர்வு இருப்பதால் வீதிகளில் இருந்து அரட்டை அடிக்கின்றனர். தப்புத்-தவறுகளைச் செய்கின்றனர். எனவே, ஒன்றாக இருந்து உண்ணும் அந்த நல்ல பழக்கத்தை மீண்டும் எமது குடும்பச் சூழலில் உருவாக்க வேண்டும்.

நபி(ﷺ) அவர்களது மனைவி உம்மு ஸலமா அவர்களுக்கு முதல் திருமணத்தில் பல குழந்தைகள் இருந்தனர்.

அவர்களில் ஒருவரான உமர் இப்னு அபீஸலமா(ؓ) அவர்கள் கூறுகின்றார்

**“நான் நபி(ﷺ) அவர்களின் பராமரிப்பில் சிறு குழந்தையாக இருந்தேன். அப்போது சாப்பிடும் போது எனது கைகள் உணவு தட்டில் அங்கும் இங்குமாக உலாவின. அவ்வேளை நபி(ஸல்) அவர்கள் 'மகனே! 'பிஸ்மில்லாஹ்' கூறுங்கள்! உங்களது வலது கையால் உண்ணுங்கள்! உங்களுக்கு முன்னால் இருப்பதை எடுத்து உண்ணுங்கள்!' என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.”** (புகாரி, முஸ்லிம், இப்னுமாஜா, அஹ்மத்)



எனவே, குழந்தைகளுடன் சேர்ந்து விளையாட வேண்டும். சேர்ந்து உண்ண வேண்டும். அதே வேளை நல்ல பழக்க-வழக்கங்களைக் கற்றுக் கொடுக்கவும் வேண்டும்.

## சந்திக்கும் போது....

குழந்தைகளைப் பிரிந்து மீண்டும் சந்திக்கும் போது அவர்கள் பெரிதும் குதூகலமடைகின்றனர். தந்தையின் வரவை அவர்கள் எதிர்பார்க்கின்றனர். எமது மனதில் உள்ள குழப்பங்களையும், சிக்கல்களையும் ஒரு குப்பையில் போட்டு மூடி விட்டு மலர்ந்த முகத்துடன் அவர்களது மகிழ்வை அனுபவிக்க நாம் கற்றுக் கொள்ள வேண்டும். சில தந்தையர்களின் வரவு பிள்ளைகளின் உள்ளத்தில் அச்சத்தையூட்டுகின்றது. இந்த நிலை இருக்கக் கூடாது. குழந்தைகளின் மலர்ந்த முகம் சிலவேளை உங்களது உளக் குமுறல்களைக் கூட அடக்கி விடும்.

குழந்தையின் சிரிப்பைப் பற்றி ஒரு கவிஞன் கூறும் போது, “பொன்னில் இன்பம் பொருளில் இன்பம் என்றே உள்ளம் மயங்கும். பூவைப் போலச் சிரிக்கும் உன்னைக் கண்டால் உண்மை விளங்கும்” எனக் கூறிக் குழந்தைகளின் சிரிப்பின் மகிமையைப் பாடுகின்றான்.

நபி(ﷺ) அவர்களின் சிறிய தந்தை அபூதாலிப் அவர்களது மகன் ஜ∴பர்(ؓ) அவர்கள் போரில் ஷஹீதானார்கள். அவர்களது குழந்தைகள் மீது நபி(ﷺ) அவர்கள் பெரிதும் பாசம் வைத்திருந்தார்கள்.

**“ஜ∴பர்(ؓ) அவர்களது மகன் அப்துல்லாஹ் கூறுகின்றார். நபி(ﷺ) அவர்கள் பயணத்திலிருந்து வரும் போது அவர்களது குடும்பத்துச் சிறுவர்கள் அவர்களை வரவேற்கச் செல்வார்கள். ஒரு முறை அவர்கள் ஒரு பயணத்திலிருந்து**

**வந்தார்கள். நான் அவர்களை முந்திச் சென்று சந்தித்தேன். என்னை நபியவர்கள் சுமந்து அவர்களது வாகனத்தின் முன்னால் வைத்துக் கொண்டார்கள். அதன் பின் ஹஸன் அல்லது ஹுஸைன் அவர்கள் வந்தார்கள். அவர்களை நபியவர்கள் தமக்குப் பின்னால் வைத்துக் கொண்டார்கள். எங்களைச் சுமந்துகொண்டு நபியவர்களது வாகனம் மதீனாவுக்குள் நுழைந்தது."**

இந்த ஹதீஸில் நபி(ﷺ) அவர்களின் வருகையை நபியவர்களின் பேரப் பிள்ளைகள் மட்டுமன்றி அவர்களது உறவுக்காரர்களின் குழந்தைகள் நபியவர்களின் மனைவியரின் முன்னைய கணவருக்குப் பிறந்த குழந்தைகள் என அனைவரும் ஆவலுடனும், அன்புடனும் எதிர்பார்த்திருந்ததை எடுத்துக் காட்டுகின்றது. குழந்தைகளுடன் அன்பையும், பாசத்தையும் பகிர்வதற்கு இது ஒரு நல்ல வழிகாட்டலாகும்.

## சிறுவர்களைக் காணாத போது தேடுதல்:

தந்தை வீட்டுக்கு வந்ததும் தனது பிள்ளைகள் குறித்து விசாரிக்க வேண்டும். குழந்தைகள் எங்கேனும் சென்று வரத் தாமதித்தால் அவர்களைத் தேடவேண்டும். இது குழந்தைக்கு எமது பெற்றோர் எம்மீது அக்கறையாக உள்ளனர் என்ற உணர்வை ஊட்டும். நாம் வெளியிடங்களுக்குச் சென்றால் வேலை முடிந்ததும் வீட்டுக்குச் சென்று விடவேண்டும். இல்லை என்றால் எமது பெற்றோர் எமது வருகையை எதிர்பார்த்து ஏக்கத்துடன் வழி மேல் விழி வைத்துக் காத்திருப்பர் என்ற எண்ணத்தை ஏற்படுத்தும். இந்த உணர்வு குழந்தைகளைத் தவறான வழியில் செல்லாமல் காக்கும் அரணாகத் திகழும்.

வீணாக வீதிகளில் விளையாடித் திரியும் இளைஞர்களின் எண்ணிக்கையைக் குறைக்கும். இன்று



இளைஞர்கள் பலரும் வழிகெடுவதற்கு வீட்டுடன் அவர்களுக்கு இறுக்கமான தொடர்பின்மை என்பது முக்கிய காரணமாகும். நண்பர்களுடன் சேர்ந்து ஆபாசப் படங்களைப் பார்க்கின்றனர். மேலதிக வகுப்பு, வீட்டுப் பயிற்சி எனப் பெற்றோரை ஏமாற்றி விட்டு கேளிக்கைகளில் ஈடுபடுகின்றனர். நண்பர்களின் தூண்டுதலால் சிகரட் மற்றும் போதைப் பாவனைக்கு அடிமையாகின்றனர். எனவே பிள்ளைகள் நீண்ட நேரம் தம்மை விட்டும் பிரிந்திருந்தால் பெற்றோர்கள் அவர்களைத் தேடுபவர்களாக இருக்க வேண்டும்.

ஒரு முறை நபி(ﷺ) அவர்கள் பனூ கைனுகா கோத்திரத்தின் சந்தைக்குச் சென்று வந்தார்கள். பின்னர் தனது இரு முழங்கால்களையும் கைகளால் பிடித்துக்கொண்ட நிலையில் மஸ்ஜிதில் அமர்ந்தார்கள். பின்னர் “அந்த சுல்லான் எங்கே? அந்த சுல்லானை அழைத்து வாருங்கள்!” எனக் கூறினார்கள். ஹஸன்(ரழி) அவர்கள் வந்ததும் பாய்ந்து அவரை அரவணைத்து அன்பு முத்தம் பொழிந்து “யா அல்லாஹ்! இவரை நான் நேசிக்கின்றேன்! எனவே நீயும் இவரை நேசிப்பாயாக! இவரை நேசிப்பவர்களையும் நேசிப்பாயாக!” என்று பிரார்த்தித்தார்கள் என அபூஹுரைரா(ரழி) அவர்கள் கூறுகின்றார்கள்.

## முத்தமிடுதல்:

முத்தம் அன்பைப் பரிமாறும் ஒரு ஊடகமாகும். சிறுவர்களுடன் உரையாடும் போது அன்பான ஸ்பரிசம் அவர்களது உடலில் ஊக்கத்தை ஊட்டும். தம்மைத் தொட்டுத் தழுவிப் பேசுபவர்களிடம் குழந்தைகள் பாதுகாப்பையும், பாசத்தையும் பெறுவதாக உணர்கின்றனர். இந்த வகையில் அன்புப் பரிமாற்றத்தில் முத்தத்திற்கு முக்கிய இடம் உண்டு.

எல்லாப் பெற்றோர்களும் தமது பிள்ளைகள் மீது பெருமளவு பாசத்துடன்தான் இருக்கின்றனர். சிலர் பாசத்தை மனதில் வைத்துப் பூட்டி வைத்து விட்டுத்தான் பழகுகின்றனர். இது தவறானதாகும். பெற்றோர்களின் மனதில் உள்ள பாசத்தைப் பிள்ளைகள் உணர முடியாது. எனவே பாசத்தைப் பேசும் வார்த்தைகள் ஊடாகவும், பழகும் முறையாலும், அன்பான அரவணைப்பின் மூலமும் வெளிப்படையாகக் காட்ட வேண்டும்.

**"நபி(ﷺ) அவர்கள் (தமது பேரக் குழந்தைகளான) ஹஸன்-ஹுஸைன்(ﷺ) இருவரையும் முத்தமிட்டார்கள். அப்போது அங்கே இருந்த அக்ரஃ இப்னு ஹாபிஸ்(ﷺ) அவர்கள் (நீங்கள் குழந்தைகளை முத்தமிடுகிறீர்களா!) எனக்குப் பத்துப் பிள்ளைகள் உள்ளனர். அவர்களில் எவரையும் நான் முத்தமிட்டதில்லை! என்று கூறினார்கள். அதற்கு நபி(ﷺ) அவர்கள், 'அன்பு காட்டாதவர் அன்பு காட்டப்பட மாட்டார்!' எனக் கூறினார்கள்."**

அறிவிப்பவர்:அபூஹுரைரா(ﷺ)
ஆதாரம்: புகாரி

இன்றைய பெற்றோர்களில் பலரும் தமது குழந்தைகள் தம்முடன் பாசத்துடனும், பரிவுடனும் நடப்பதில்லை நம்மை மதிப்பதில்லை என்ற ஏக்கத்தில் காலத்தைக் கழிக்கின்றனர். மற்றும் சிலர் முதியோர் இல்லங்களில் தமது இறுதிக் காலத்தைக் கழிக்கின்றனர். குழந்தைகளுக்கு வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களை வாங்கிக் கொடுத்தாலும், கொடுக்காது விட்டாலும் அது பெரிய தாக்கத்தை அவர்களது மனதில் ஏற்படுத்தாது. இருப்பினும் தமது பெற்றோர்கள் தம்மீது போதிய அக்கறையும், கரிசனையும் காட்டவில்லை என்ற எண்ணம் அடிமனதில் அழகாகப் பதிந்து விட்டால் அது



ஆபத்தாக அமைந்து விடும். எனவே, எமது குழந்தைகள் எமது இறுதிக் காலத்தில் எங்கள் மீது அன்பு காட்ட வேண்டுமானால் நாம் அவர்களது இளமைப் பருவத்தில் எமது அன்பை வெளிப்படுத்த வேண்டும். அதற்கான சிறந்த வழியாக முத்தமிடுவது அமைந்திருப்பதை இந்த நபிமொழி உணர்த்துகின்றது.

## குழந்தை, பெரியவர்களுடன் செய்யும் குறும்புத்தனங்களை அங்கீகரித்தல்:

குழந்தைகள் என்றால் குறும்புத்தனம் இருக்கவே செய்யும். பல நேரங்களில் அவர்களின் குறும்புத்தனங்கள்தான் நொந்து போன உள்ளங்களுக்கு ஒத்தடமாக அமைந்து விடுகின்றது. வீட்டில் நிலவும் விரும்பத்தகாத அமைதியை அவர்களின் குறும்புகள்தான் விரட்டியடிக்கின்றன. கணவன்-மனைவிக்கிடையே ஏற்படும் தகராறுகள், மன முரண்பாடுகள் என்பவற்றைத் தீர்த்து வைக்கும் நீதிபதியாகக் கூட அவர்களின் குறும்புத்தனம் அமைந்து விடுவதுண்டு! எனவே குழந்தைகளின் குறும்புத்தனம் வெறுக்கப்பட வேண்டிய ஒன்று அல்ல. குழந்தைகளின் குறும்புத்தனம் ஆபத்தை விளைவிக்காமல் பார்த்துக்கொண்டால் போதுமானது.

குழந்தைகள் எதையும் அறிய வேண்டும் என்று ஆர்வம் கொள்வர். அவர்களின் குறும்புத்தனமும், அறிந்துகொள்ளும் ஆர்வமும் கூட்டணி அமைத்து அவர்கள் பேசும் பேச்சுக்களும், செய்யும் செயல்களும் உண்மையில் இரசிக்கத்தக்கவை. எனினும் வீட்டுக்கு வந்த பெரியவர்களிடம் அவர்கள் வித்தியாசமான வினாக் கணைகளைத் தொடுக்கும் போது சூழ இருப்பவர்கள் சிலபோது சங்கடப்பட நேர்வதுண்டு! சில சிறுவர்கள் வீட்டுக்கு அடிக்கடி வருபவர்களிடம் "நீங்க ஏ எங்கட

ஊட்டுக்கு ஒரே வார? ஒங்கட ஊட்டுல டீ இல்லையா?” என்றெல்லாம் கேட்டுத் தொலைப்பார்கள். வந்தவர் சற்று நெளிவார். வீட்டாரும் இப்படிக் கேட்டு விட்டானே எனச் சங்கடப்படுவதுடன் பிள்ளைகளைக் கண்டிக்கவும் செய்வர். சிலர் குழந்தைத்தனத்தை இரசிக்கத் தெரியாமல் “நான் இங்கு வருவதைப் பற்றி வீட்டில் தப்பாகப் பேசியிருக்கிறார்கள். அதுதான் சிறுவன் இப்படிக் கேக்குறான்!” எனத் தவறாக எண்ணி விடுகின்றனர். இது தவறாகும்.

சிறுவர்கள் பல விடயங்கள் குறித்தும் சிந்திக்கின்றார்கள். அவர்களிடம் கள்ளம்-கபடம் இல்லாததினால் தமது மனதில் எழுந்த எண்ணத்தை பளிச்சென வெளிப்படையாக வெளிப்படுத்துகின்றனர். இது அவர்களின் சிந்தனையின் வெளிப்பாடு. இதைத் தடுத்து அவர்களின் சிந்திக்கும் திறனையும், கற்பனை வளத்தையும் முளையிலேயே முடக்கி விடக்கூடாது.

இவ்வாறே சில பிள்ளைகள், பெரியவர்கள் சிலரின் உடையைப் பிடித்து இழுப்பர்; சீண்டிப் பார்ப்பர் தாடியைப் பிடிப்பர். இதுவெல்லாம் குழந்தைகள் உள்ளத்தில் அச்சத்தை அகற்றி அவர்கள் அடுத்தவர்களுடன் சகஜமாகப் பழகும் ஆளுமையை அடைந்து வருகின்றனர் என்பதற்கான அடையாளங்களாகும். எனவே எமது நிலையிலிருந்து இதை நோக்காமல் சிறுவர்கள் என்ற அவர்களது மனநிலையிலிருந்து நோக்கி இச்செயல் பாடுகளைப் புரிந்து நடந்துகொள்ள வேண்டும்.

“அப்படிச் செய்யாதே!”, “இப்படிப் பேசாதே!” என்று அவர்களை அதட்டி அவர்களின் குறும்புத்தனத்தை அழிப்பதோ, அவர்களின் உள்ளத்தை உடைப்பதோ,



குழந்தை உள்ளத்தைச் சிதைப்பதோ தவிர்க்கப்பட வேண்டியதாகும்.

நபி(ﷺ) அவர்களிடம் கறுப்புப் புள்ளிகள் போடப்பட்ட ஒரு ஆடை கொண்டுவரப்பட்டது. “இதை நாம் யாருக்கு அணிவிக்கலாம்?” என நபி(ﷺ) அவர்கள் கேட்டார்கள். கூட்டத்தில் இருந்தவர்கள் மௌனம் காத்தனர். எனவே நபி(ﷺ) அவர்கள் “ஹாலித் இப்னு ஸயித்(رضي الله عنه) அவர்களின் மகள் உம்மு காலிதை அழைத்து வாருங்கள்!” என்று கூறினார்கள். அச்சிறுமி சுமந்து வரப்பட்டாள். நபி(ﷺ) அவர்கள் அச்சிறுமியை எடுத்துத் தன் கையாலேயே அந்த ஆடையை அவளுக்கு அணிவித்தார்கள்.

பின்னர், “ஸனா! ஸனா!” என்று கூறினார்கள். இது அறபு வார்த்தை அல்ல. இது அபீஸீனியப் பாஷையாகும். “ஸனா” என்றால் அழகு என்று அர்த்தமாகும். இந்தச் சிறுமி அபீஸீனியாவிலிருந்து வந்திருந்ததால் அந்தச் சிறுமிக்குப் புரியும்படி அவளது பாஷையில் “அழகாக இருக்கிறது!” என்று கூறினார்கள். அது மட்டுமன்றி அச்சிறுமியின் நீண்ட ஆயுளுக்காகப் பிரார்த்தனையும் செய்தார்கள். இந்தச் சிறுமி, தான் பெரியவளான போது இந்த ஹதீஸை அறிவிக்கும் போது,

“பின்னர் நான் நபி(ﷺ) அவர்களை அண்டி அவர்களின் இறுதி நபித்துவ முத்திரை அடையாளத்தைப் பிடித்து விளையாட ஆரம்பித்தேன். அப்போது (நான் நபி(ஸல்) அவர்களுடன் மரியாதைக் குறைவாக நடப்பதாக எண்ணிய) எனது தந்தை என்னை அதட்டினார். அதற்கு நபியவர்கள் எனது தந்தையைப் பார்த்து ‘அவளை அவள் பாட்டில் விட்டு விடு!” எனக் கூறினார்கள்.

## உண்மையாக நடந்துகொள்ளுதல்:

பிள்ளைகள், பெரியவர்களை முன்மாதிரியாகக் கொள்கின்றனர். இந்த வகையில் பெரியவர்கள் – குறிப்பாகப் பெற்றோர்கள் பிள்ளைகளுக்குச் சிறந்த முன்மாதிரிகளாகத் திகழ வேண்டும். குழந்தைகளுடன் பேசும் போது பொய் பேசலாகாது! வாக்களித்தால் மீறக்கூடாது! போலி வாக்குறுதிகள் அளிக்கவும் கூடாது! இந்த விடயத்தில் பெற்றோர்கள் – குறிப்பாகத் தாய்மார்கள் தவறு விடுகின்றனர்.

அழுகின்ற பிள்ளையைச் சமாளிப்பதற்காகவும், பிள்ளைகளிடமிருந்து வேலை வாங்குவதற்காகவும் அது தருவேன், இது தருவேன் என அரசியல்வாதிகள் போன்று போலி வாக்குறுதிகளை அள்ளி வீசுகின்றனர். பின்னர் தேர்தல் முடிந்த கதை போன்று கண்டுகொள்ளாமல் விட்டு விடுகின்றனர். இதனால் குழந்தைகள் பொய்யையும், வாக்களித்து விட்டு மாறு செய்வதையும், ஏமாற்றுவதையும் சர்வ-சாதாரண விடயங்களாக எடுத்துக்கொள்வர். இவை மூன்றும் முனா∴பிக்குகளின் பண்பாகும். இந்த மூன்று குற்றத்தையும் சாதாரணக் குற்றங்களாக அவர்கள் கருத ஆரம்பித்து விட்டால் அது அவர்களது எதிர்கால வாழ்வில் பாரிய வீழ்ச்சியை உண்டுபண்ணி விடும். இந்த வகையில் பிள்ளைகளிடம் பொய் சொல்லவோ, போலி வாக்குறுதி அளிக்கவோ கூடாது. அவர்களைச் சின்ன விடயத்தில் கூட ஏமாற்றக் கூடாது!

இதற்கு மாற்றமாக நடந்தால் பெற்றோர் பற்றிய நல்லெண்ணம் பிள்ளைகளிடம் எடுபட்டு விடும். 'எனது தாய் பொய் சொல்பவள், எனது தந்தை ஏமாற்றுபவர்' என்ற எண்ணம் ஏற்பட்டு விட்டால் அவர்கள் பெற்றோரின் எந்தப் போதனைகளையும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.



எனவே இது விடயத்தில் பெரும் பொறுப்புணர்வுடன் நடந்துகொள்ள வேண்டும்!

**"அப்துல்லாஹ் இப்னு ஆமிர் (ﷺ) அவர்கள் கூறுகின்றார்கள். 'எங்களது வீட்டில் நபி(ﷺ) அவர்கள் இருக்கும் போது எனது தாய் என்னை அழைத்தார்கள்.' அப்போது 'வா! ஒரு சாமான் தருவேன்!' எனக் கூப்பிட்டார். இது கேட்ட நபி(ﷺ) அவர்கள் 'நீங்கள் குழந்தைக்கு என்ன கொடுக்க விரும்புகின்றீர்கள்?' எனக் கேட்டார்கள். எனது தாய் 'நான் பேரீத்தம் பழம் கொடுப்பேன்!' என்றார்கள். அதற்கு நபி(ﷺ) அவர்கள் (இப்படி அழைத்து விட்டு) குழந்தைக்கு எதையாவது நீங்கள் வழங்காவிட்டால் பொய் சொன்ன குற்றம் உங்கள் மீது பதியப்படும்!' எனக் கூறினார்கள்."**

எனவே குழந்தைகளை ஏமாற்றவோ, அவர்களிடம் பொய் பேசவோ, போலி வாக்குறுதிகளை வழங்கவோ கூடாது. இது அவர்களின் ஆளுமையில் பாரிய வீழ்ச்சியை உண்டுபண்ணும் என்பதைப் பெற்றோர் உணர்ந்துகொள்ள வேண்டும்.

## ஆடை விடயத்தில் அவதானம்:

"ஆள் பாதி! ஆடை பாதி!" என்பர். ஆடையை வைத்து மனிதன் மதிப்பிடப்படுகின்றான். எனவே மனிதன் அணியும் ஆடை அவனுக்கு கண்ணியத்தையும், ஆளுமையையும் அளிக்கின்றது. சில ஆடைகள் குப்பார்களின் அடையாளமாகவும், மற்றும் சில ஆடைகள் குற்றச் செயல்களைச் செய்பவர்களினதும், நாகரிகம் அற்றவர்களினதும் ஆடைகளாக உள்ளன. மற்றும் சில ஆடைகள் ஒழுக்கங்கெட்டவர்களின் அடையாளமாக இருக்கின்றது. எனவே எமது குழந்தைகளின் ஆடை விடயத்தில் நாம் மிகுந்த அக்கறை செலுத்த வேண்டும்.

சில பெற்றோர் ஆண்பிள்ளைகளுக்குப் பெண்பிள்ளைகளினதும், பெண்பிள்ளைகளுக்கு ஆண்பிள்ளைகளினதும் ஆடைகளை அணிவித்து அழகு பார்க்கின்றனர். ஆண்பிள்ளை இல்லாத பெற்றோர் தனது பெண்பிள்ளைக்கு ஆண்பிள்ளைகளுக்குரிய ஆடைகளை அணிவித்துத் தமது ஆசையைத் தீர்த்துக்கொள்ள முற்படுகின்றனர். இதை இஸ்லாம் தடுத்துள்ளது.

ஆண் போன்று ஆடை அணியும் பெண்ணையும், பெண் போன்று ஆடை அணியும் ஆணையும் நபி(ﷺ) அவர்கள் சபித்துள்ளார்கள். உங்கள் குழந்தைகள் நபி(ﷺ) அவர்களின் சாபத்துக்குள்ளாகுவதை நீங்கள் விரும்புகின்றீர்களா?

இவ்வாறு பால் மாறி ஆடை அணிவது பழக்க-வழக்கத்திலும், பண்பாட்டிலும் பாரிய பாதிப்பை ஏற்படுத்தும். ஆணிடம் பெண் தன்மையையும், பெண்ணிடம் ஆண் தன்மையையும் ஏற்படுத்தி விடும். இதனால் அவர்களிடம் ஒழுக்க வீழ்ச்சி ஏற்படுவதுடன் சமுகத்தின் கேலிப் பொருளாகவும் அவர்கள் மாறி விடுவார்கள்.

அடுத்து, அணியும் ஆடை கண்ணியமானதாக இருந்தால் அதை அணிந்தவனின் செயல்பாடும் கண்ணியமானதாக இருக்கும். இன்றைய பெற்றோர் சினிமா நடிகர்களின் ஆடைகளைத் தமது குழந்தைகளுக்கு அணிவித்து அழகு பார்க்க ஆசைப்படுகின்றனர். அவர்கள் அணியும் ஆடைக்கு ஏற்ப அவர்களிடம் செயல்பாட்டிலும் மாற்றம் இருக்கும். முரட்டுத்தனமான ஆடை அணிபவர்களிடம் நீங்கள் மென்மையை எதிர்பார்க்க முடியாது. அநாகரிகமான ஆடைகளை அணிபவர்களிடம்



நீங்கள் நாகரிகத்தை எதிர்பார்க்க முடியாது. எனவே ஆடை விடயத்தில் அவதானம் செலுத்த வேண்டும். கண்ணியமான தோற்றத்தைத் தரும் ஆடைகளை அவர்களுக்கு அணிவிக்க வேண்டும். நபி(ஸல்) அவர்கள் குழந்தைகளின் ஆடை விடயத்தில் கரிசனை காட்டியுள்ளார்கள்.

**“அம்ரிப்னுல் ஆஸ் (ரழி) அவர்களின் மகன் அப்துல்லாஹ்(ரழி) அவர்கள் கூறுகின்றார்கள். நான் மஞ்சள் சாயம் பூசப்பட்ட இரண்டு ஆடைகள் அணிந்த நிலையில் என்னை நபி(ﷺ) அவர்கள் கண்டார்கள். ‘உனது தாய்தான் இந்த ஆடையை அணிவித்தாளா? இது நிராகரிப்பாளரின் ஆடை. இதை அணிய வேண்டாம்!’ எனக் கூறினார்கள்.”**

(முஸ்லிம்)

இந்த வகையில் நபி(ﷺ) அவர்கள் சிறுவர்களின் ஆடையில் அவதானம் செலுத்தியிருப்பதை அவதானிக்கலாம். எனவே, பெற்றோர் தமது குழந்தைகளுக்கு ஆடை எடுக்கும் போது கூடிய அக்கறை செலுத்த வேண்டும். சில பெற்றோர் வயதுக்கு வந்த பெண் பிள்ளைகளின் ஆடை விடயத்தில் கூட அலட்சியமாக இருக்கின்றனர். “ஜீன்ஸ்”, டீ-சேர்ட் சகிதம் தலையில் ஒரு துண்டைப் போட்டுக்கொண்டு பாதையில் பவணிவர அனுமதிக்கின்றனர். இது ஹறாமாகும். நாளை மறுமையில் நிச்சயமாக இதற்கு நாம் பதில் சொல்லியாக வேண்டும். ஆடை என்பது ஒரு மனிதனின் ஆளுமையிலும், ஒழுக்கத்திலும் அதிக தாக்கத்தைச் செலுத்தும் அம்சமாகும் என்பதைக் கவனத்தில் கொண்டு குழந்தைகளின் ஆடை விடயத்தில் அதிக அக்கறை செலுத்துவது அவசியமாகும்.

## சிநேகம் கொள்ளுதல்:

பெரியவர்களிடமிருந்து அறிவையும், ஒழுக்கத்தையும், சமூகப் பண்பாட்டையும் பெற்றுக்கொள்ளும் விதமாகச் சிறுவர்கள் பெரியவர்களுடன் சினேகம் கொள்ளும் உரிமையைப் பெற்றுள்ளனர். இளம் பிராயத்தினருடன் சமூக அந்தஸ்த்துப் பெற்ற பெரியவர்கள் நெருக்கமாகப் பழகும் போது அவர்கள் மகிழ்வடைகின்றனர். அதைத் தமக்குக் கிடைத்த கௌரவமாகக் கருதுகின்றனர். தாமும் சமூகத்தில் மதிக்கத்தக்க பிரஜையாக மாறிவிட்டதாக உணர்கின்றனர். இந்த வகையில் சமூக-சமயப் பெரியவர்கள் சிறுவர்களுடன் சிநேகம் கொள்வது அவர்களது ஆளுமையை விருத்தி செய்யும். இந்த வகையில் நபி(ﷺ) அவர்கள் இளம் சிறுவர்களுடன் சிநேகமாகப் பழகியுள்ளார்கள். அவர்களது அறிவுக்கும், ஆற்றலுக்கும் ஏற்ப அவர்களுக்குப் போதனை செய்துள்ளார்கள். அனஸ், இப்னு உமர், இப்னு அப்பாஸ், இப்னு மஸ்ஊத் என நபி(ﷺ) அவர்களின் சினேகத்தைப் பெற்ற சிறுவர்கள் ஏராளம் உள்ளனர்.

ஒரு நாள் நபி(ﷺ) அவர்கள் இப்னு அப்பாஸ்(ؓ) அவர்களைத் தனது வாகனத்தில் ஏற்றிக்கொண்டு பயணிக்கும் போது, “சிறுவனே! நான் உனக்குச் சில வார்த்தைகளைக் கற்றுத் தருகின்றேன். நீ அவற்றைப் பேணிக்கொள்! அல்லாஹ் உன்னைப் பாதுகாப்பான். நீ அவற்றைப் பேணிக்கொள்! அவனை உன் முன்னால் காண்பாய். நீ பிரார்த்தித்தால் அல்லாஹ்விடம் மட்டுமே கேட்க வேண்டும். நீ பாதுகாவல் தேடினால் அல்லாஹ் ஒருவனிடம் மட்டுமே பாதுகாவல் தேட வேண்டும். அறிந்துகொள்! மனித சமூகம் ஒன்றுசேர்ந்து உனக்கு உதவ முற்பட்டாலும் அல்லாஹ் உனக்கு எழுதியதைத்



தவிர அதிகமாக எந்த உதவியையும் செய்திட முடியாது. அவ்வாறு மனித சமூகம் உனக்குத் தீங்கு செய்ய எண்ணி விளைந்தாலும் உனக்கென அல்லாஹ் விதித்ததைத் தவிர அதிகமாக எந்தத் தீங்கையும் அவர்களால் செய்து விட முடியாது. பேனைகள் உயர்த்தப்பட்டு விட்டன. ஏடுகள் காய்ந்து விட்டன” என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.

இவ்வாறே ஒரு முறை பழ்ல் இப்னு அப்பாஸ்(ؓ) என்ற சிறுவர் நபியவர்களுடன் வாகனத்தில் இருந்தார். ஒரு பெண் நபி(ﷺ) அவர்களிடம் மார்க்க விடயம் தொடர்பாகக் கேள்வி கேட்டார். பழ்ல் அந்தப் பெண்ணையே பார்த்துக்கொண்டிருந்தார். நபி(ﷺ) அவர்கள் அந்த இளைஞரின் முகத்தை மறுபக்கம் திருப்பி விட்டார்கள் என்றெல்லாம் ஹதீஸ்களில் காண முடிகின்றது. இவை நபி(ﷺ) அவர்கள் இளம் ஸஹாபாக்களுடன் கொண்டிருந்த இறுக்கமான சினேகத்திற்குச் சான்றுகளாகத் திகழ்கின்றன.

## சிறுவர்களின் உள்ளத்தை ஈர்க்கும் வார்த்தைகளைப் பயன்படுத்துதல்:

நபி(ﷺ) அவர்கள் சிறுவர்களுடன் நெருக்கமான சினேகம் கொண்டு அவர்களின் ஆளுமை விருத்திக்குப் பங்காற்றினார்கள். இவ்வாறே சிறுவர்களின் உள்ளத்தை ஈர்க்கும் மென்மையான, அன்பான வார்த்தைகளைப் பயன்படுத்துவார்கள்.

சிலபோது “யா குலாம்!” (பையனே/சிறுவனே) என அழைப்பார்கள். சிலபோது “அருமை மகனே!” எனச் செல்லமாக அழைப்பார்கள். தனது பணியாளான அனஸ்(ؓ) அவர்களை நபி(ஸல்) அவர்கள் “யா புனைய!” (எனது அன்பு மகனே! சின்ன மகனே! என்று

அர்த்தம் தொனிக்கும் பதம்) கொண்டு அழைத்துள்ளார்கள்.

சிலபோது புனைப்பெயர் வைத்து அழைப்பார்கள். அதில் சிலபோது நகைச்சுவையும் இழையோடியிருக்கும். அலி(ரழி) அவர்கள் கோபத்தோடு மண்ணில் படுத்திருந்து மண் ஒட்டிய நிலையில் காட்சியளித்த போது, "யா அபத்துராப்!" (மண்ணின் தந்தையே!) என அழைத்துள்ளார்கள். இவ்வாறு ஒரு நபித்தோழரை "இரண்டு காதுகளையுடையவரே!" என்றும், மற்றும் ஒருவரை "துல்யதைன்!" (இரு கைகளையுடையவரே!) என்றும் அவர் கூறி அழைத்துள்ளார்கள். சிலபோது "யப்ன அஹீ!" (என் சகோதரனின் மகனே!) என்று அழைப்பார்கள். இவ்வாறு உரையாடும் போது அவர்கள் தயக்கமின்றிப் பெரியவர்களுடன் பழகும் பக்குவத்தை அடைவார்கள்.

## சிறுவர்களின் உணர்வுகளை மதித்தல்:

சிறுவர்களின் உணர்வுகளை மதித்து நடக்கும் போது அவர்கள் தாம் சமூக அந்தஸ்த்தைப் பெறுவதாக உணர்கின்றனர். அவர்களது உரிமைகள் மறுக்கப் படுவதாக அவர்கள் உணர்ந்தால் அவர்கள் உள ரீதியாக ஊனமுறுகின்றனர். எனவே அவர்களின் உணர்வுகளையும், உரிமைகளையும் மதித்து நடக்க வேண்டும்.

ஒரு சபையில் நபி(ﷺ) அவர்களுக்குப் பால் கொடுக்கப்பட்டது. அதை அருந்தி விட்டு நபி(ﷺ) அவர்கள் வலது பக்கம் பார்த்தார்கள். அங்கே இப்னு அப்பாஸ் எனும் சிறுவர் இருந்தார். இடது பக்கம் அபூபக்கர்(ரழி) போன்ற பெரியவர்கள் இருந்தார்கள். அப்போது பால் கிண்ணத்தைப் பெரியவர்களுக்குக் கொடுக்க விரும்பிய



நபி(ﷺ) அவர்கள் இப்னு அப்பாஸ்(ரழி) அவர்களிடம் 'பெரியவர்களுக்குக் கொடுப்பதற்கு எனக்கு அனுமதியளிப்பாயா!' எனக் கேட்டார்கள். அவர் மறுத்த போது கிண்ணத்தை அவரது கையிலேயே கொடுத்தார்கள்.

சிறுவர்களின் உரிமைகளையும், உணர்வுகளையும் நபி(ﷺ) அவர்கள் எவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து நோக்கியுள்ளார்கள் என்பதற்கு இந்த நபிமொழி நல்ல சான்றாகும்.

## விளையாட அனுமதியுங்கள்!:

சிறுவர்கள் விளையாட்டையும், வெளியில் பயணம் செல்வதையும் விரும்புவார்கள். குறிப்பாகப் பெற்றோர்களுடன் பயணிப்பதில் அவர்களுக்கு அலாதிப் பிரியம் உண்டு. எனவே இவற்றைப் பெற்றோரும், பெரியோர்களும் மதித்து நடக்க வேண்டும்.

சில பெற்றோரும், பெரியோரும் சிறுவர்கள் விளையாடுவதை அனுமதிக்க மாட்டார்கள். "திண்டால் உண்டால் சும்மா இருக்க வேண்டியது தானே!" எனத் தமது நிலையிலிருந்து சிறுவர்களை நோக்குவர். சிறுவர்களை விளையாட அனுமதிப்பது அவர்களின் ஆளுமைகளை விருத்தி செய்யும்.

விளையாடும் போது சட்டத்திற்குக் கட்டுப்படவும், தோல்வியைத் தாங்கிக்கொள்ளவும், கூட்டு முயற்சியில் ஒருவருக்கொருவர் உறுதுணையாகச் செயல்படவும், தலைமை தாங்கவும், தலைமைக்குக் கட்டுப்படவும் அவர்கள் பழக்கப்படுகின்றனர்.

நபி(ﷺ) அவர்கள் ஆகுமான விளையாட்டுக்களை அங்கீகரித்துள்ளார்கள். அபூதல்ஹா(ؓ) அவர்களது மகன் அபூ உமைர் குருவிக் குஞ்சோடு விளையாடுவதை நபி(ﷺ) அவர்கள் தடுக்கவில்லை. ஆயிஷா(ரழி) அவர்கள் திருமணத்தின் பின் நபி(ﷺ) அவர்களின் வீடு செல்லும் போது தனது விளையாட்டுப் பொருட்களையும் எடுத்துச் சென்றார்கள். அதை நபி(ﷺ) அவர்கள் அங்கீகரித்தார்கள். ஆயிஷா(ரழி) அவர்களின் தோழிகள் அவர்களுடன் நபி(ﷺ) அவர்களின் வீட்டில் விளையாடுவதையும் அங்கீகரித்தார்கள். இந்த அங்கீகாரம் விளையாட்டின் அவசியத்தையும், அதன்பால் சிறுவர்களுக்குள்ள தேவையையும் உணர்த்துகின்றது.

இன்றைய சிறுவர்கள் தமது விளையாடும் உரிமையை இழந்து நிற்கின்றனர். “படி! படி!” என்ற பெற்றோரின் திணிப்பு, பாடசாலை-பள்ளிக்கூடம்-டியூசன் என அவர்களது இயல்பு வாழ்வு இயந்திரமயமாக்கப் பட்டுள்ளது. இது தவறாகும்.

படிப்பு என்பது களைப்பும் சோர்வும் தரும் ஒரு அம்சமாகும். அந்தக் களைப்பும் சோர்வும் நீங்கிப் புத்துணர்ச்சி பெற விளையாட்டு மிக அவசியமாகும். தொடர்ந்து சிறுவர்கள் படிப்பது உள்ளத்தைச் சாகடித்து விடும். அவர்களது கனவுகளை நசுக்கி விடும். இதன் பின் அவர்கள் படிப்பது ஒழுங்காக ஏறாது. எனவே இடைக்கிடையே அவர்கள் விளையாட வேண்டும். அந்த விளையாட்டுக்கள் அவர்களது உள்ளத்திற்கு ஊக்கமளிப்பதாகவும், உடலுக்கு உற்சாகம் அளிப்பதாகவும் இருக்க வேண்டும். இன்று எமது சிறுவர்களிடம் வளர்ந்து வரும் கம்ப்யூட்டர் கேம்ஸ், ∴போன் கேம்ஸ் என்பன உடலுக்கு உற்சாகமளிக்காதவை.



அவை பார்வைக்குச் சோர்வை அளிக்கும். ஓரளவு இந்த விளையாட்டுக்களை அனுமதித்தாலும் தொடர்ந்து மணிக்கணக்கில் இந்த விளையாட்டுக்களில் ஈடுபடுவது விளையாட்டின் எத்தகைய நன்மைகளையும் அளிக்காது என்பது கவனத்திற்கொள்ளத்தக்கதாகும்.

## விளையாடும் சிறுவர்களை உற்சாகப்படுத்துதல்:

நபி(ﷺ) அவர்கள் சிறுவர்கள் ஒன்றுசேர்ந்து விளையாடும் போது அவர்களை உற்சாகப் படுத்தியுள்ளார்கள். அம்பெறிந்து விளையாடியவர்களைப் பார்த்து, “இஸ்மாயீலின் பிள்ளைகளே! நீங்கள் அம்பெறியுங்கள்! உங்கள் தந்தை அம்பெறிபவராக இருந்தார்” எனக் குறிப்பிட்டார்கள். இதேவேளை மோசமான விளையாட்டில் ஈடுபடும் போது கண்டித்தும் உள்ளார்கள். அம்பெறிந்து விளையாடும் போது உயிருள்ள பிராணிகளை இலக்காக வைத்து எறிபவர்களைச் சபித்துள்ளார்கள். இந்த வகையில் விளையாட்டை ஊக்குவித்த நபி(ﷺ) அவர்கள் சிறுவர்கள் விளையாடும் போது பார்வையாளராக இருந்து அவர்களை ஊக்குவித்துமுள்ளார்கள். ஒரு முறை அனஸ்(ؓ) அவர்களை நபி(ﷺ) அவர்கள் ஒரு வேலைக்காகத் தேடிய போது அவர் சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டிருந்தார். நபி(ﷺ) அவர்கள் அந்தச் சிறுவர்களுக்கு ஸலாம் கூறி அனஸ்(ؓ) அவர்களை ஒரு தேவைக்காக அனுப்பி விட்டு ஒரு நிழலில் அமர்ந்து அனஸ்(ؓ) வரும் வரை விளையாட்டை அவதானித்தார்கள். பெரியவர்களும், பெற்றோர்களும் தம்மைப் பார்த்துக் கொண்டிருப்பதாக அறிந்தால் சிறுவர்கள் இன்னும் அதிக உற்சாகத்துடன் விளையாடுவார்கள்.

## பிரிக்கக் கூடாது:

குழந்தைகளையும், பெற்றோர்களையும் அல்லது அந்தக் குழந்தைகள் ஒட்டி உறவாடி வாழ்ந்தவர்களையும் பிரிப்பது கொடிய குற்றமாகும். பெற்றோரின் அரவணைப்பில் வாழ்வது என்பது குழந்தைகளின் உரிமையாகும். இன்று இந்த உரிமைகளும் தந்தைகளிடமிருந்து பிரிக்கப்பட்டு விட்டது.

வறுமை, சீதனம் சேர்த்தல், ஆடம்பர மோகம், பிறரைப் போல வாழும் ஆசை, பிறரின் தூண்டுதல் போன்ற பல காரணங்களால் பல தாய்மார்கள் பெற்றெடுத்த பிள்ளைகளைப் பிறரின் பொறுப்பில் போட்டு விட்டு வெளிநாடு செல்கின்றனர். தமது பிள்ளைகளை ஏக்கத்தில் தவிக்க விட்டு விட்டு பணத்திற்காகப் பிறரின் பிள்ளையை அரவணைத்து வளர்க்கின்றனர். தாய்ப்பாசம் இல்லாது வாழும் இந்த மலர்கள் செய்த குற்றம் என்ன?

இவ்வாறே தந்தையரின் வெளிநாட்டு வேலைவாய்ப்பால் தந்தையின் அரவணைப்பைக் குழந்தைகள் இழக்கின்றனர்.

ஆடு-மாடு போன்ற கால்நடைகள், பறவைகள் என்பன போன்ற உயிரினங்களுக்குள் கூடத் தாய்க்கும், சேய்க்குமிடையில் பிரிவினையை உண்டுபண்ணுவதை இஸ்லாம் தடுத்துள்ளது. ஆடு-மாடுகளை விற்கும் போது தாயையும், கன்றையும் தனித்தனியாகப் பிரித்து விற்பதை நபி(ﷺ) அவர்கள் தடுத்துள்ளார்கள். குழந்தைகள் பெற்றோரை விட்டும் பிரிந்து வாழ்ந்தால் அவர்களது மன வளர்ச்சியும், ஆளுமை விருத்தியும் பாதிக்கப்படும். பின்வரும் ஹதீஸ் மூலம் இவ்விடயத்தில் இஸ்லாம் காட்டிய கரிசனையைக் கண்டுகொள்ள முடியும்.



பெற்றோருக்கும், பிள்ளைகளுக்கும், இரு சகோதரர் களுக்குமிடையில் பிரிவினையை உண்டுபண்ணுபவனை நபி(ﷺ) அவர்கள் சபித்தார்கள். அதுமட்டுமன்றி சபையில் வரும் போது தந்தைக்கும், பிள்ளைக்குமிடையில் அமர்வதையும் நபி(ﷺ) அவர்கள் தடுத்தார்கள். தந்தை தான் தனது குழந்தையின் இயல்புகளையும், பழக்கங்களையும், தேவைகளையும் அறிந்திருப்பார். குழந்தை சிலபோது பசியை உணரலாம்; தூங்க விரும்பலாம்; மலசல தேவையை வெளியிடலாம். சபையில் பெற்றோர் பிள்ளையிடம் இருக்கும் போது இந்தத் தேவைகளை உணர்ந்து செயல்படலாம். அந்தக் குழந்தைக்கு வழிகாட்டலாம். இதற்கு மாற்றமாகக் குழந்தைக்கும் பெற்றோருக்குமிடையில் அமர்வது பல சங்கடங்களை ஏற்படுத்தும்.

குழந்தை, தான் தனித்து விடப்பட்டது போன்ற உணர்வை அடையலாம். கூட்டம் எப்போது கலையும்? என்ற எதிர்பார்ப்பே குழந்தையிடம் இருக்கும். கூட்டம் கலைந்ததும் தந்தையைப் பிரிந்து விட்டால் என்ன செய்வது? என்ற அச்சம் அதை ஆட்கொள்ளும். அந்தக் கூட்டத்திலிருந்து அந்தப் பிள்ளை எந்தப் பயனையும் பெறாது. எனவேதான் தந்தைக்கும், அவரது குழந்தைக்கும் நடுவில் அவைகளில் அமர்வதை நபி(ﷺ) அவர்கள் தடுத்தார்கள். (இப்னுமாஜா)

எனவே, பெற்றோர்களுக்கும் பிள்ளைகளுக்கும், அல்லது அந்தப் பிள்ளையை அன்புடன் அரவணைப்பவர் களுக்குமிடையில் பிரிவை ஏற்படுத்துவது குழந்தைகளின் ஆளுமை விருத்திக்கு ஆபத்தானது என்பதை அறியலாம்.

எனவே, சிறுவர்களுக்கும், அவர்கள் அன்புடன்

பழகுபவர்களுக்குமிடையில் பிரிவினையை உண்டு பண்ணுவதைத் தவிர்த்தல் வேண்டும். தனிப்பட்ட ரோசம், கோபத்திற்காகப் பெரியவர்கள் இளம் பிஞ்சுகளின் இதயத்தில் அம்பைப் பாய்ச்சக் கூடாது.

### திட்டுவதையும், குறை கூறுவதையும் தவிர்த்தல்:

சில பெற்றோர் எப்போதும் தமது குழந்தைகளைக் குறை கூறிக்கொண்டும், குத்திப் பேசிக்கொண்டும் இருப்பர். அவர்களின் பணிகளில் குறை காண்பதில் இவர்களுக்கு அலாதிப் பிரியம் இருக்கும். இருப்பினும் குழந்தைகளின் நன்மைகளையோ, திறமைகளையோ மறந்தும் கூட இவர்கள் போற்றுவதும் இல்லை புகழ்வதுமில்லை. இதனைப் பின்வரும் விதமாக ஒரு கவிஞன் பாடுவதை இவர்கள் நினைத்துப் பார்க்க வேண்டும்

ஊக்கமருந்தினைப் போன்றது பெற்றோர் போற்றும் புகழுரைகள்! நோய் தீர்க்கும் மருந்தினைப் போன்றது கற்றோர் கூறும் அறிவுரைகள்!

பிள்ளைகள் பெற்றோரின் புகழுரைகளை விரும்புகின்றனர். இது அவர்களை ஊக்கப்படுத்தும்; உற்சாகப்படுத்தும். அவர்களின் ஆற்றல்களை அதிகரிக்கும்.

சில பெற்றோர் குழந்தைகளின் திறமைகளைக் கண்டு மனதுக்குள் மகிழ்ந்துகொள்வர். ஆனால் பிள்ளைகளைப் போற்ற மாட்டார்கள். வகுப்பில் மகன் இரண்டாவது வந்துள்ளான் என்றால் முதலில் இரண்டாவது வந்ததைப் போற்றாமல் "ஏன் முதலாவது வரவில்லை எனக் கண்டிப்பர். சில பெற்றோர் பெண்



பிள்ளைகளின் வேலைகளைப் பார்த்துக் குறை கூறுவர். யாருடைய நினைப்பில் வீட்டைக் கூட்டினாய்? என்ற தொனியில் பேசுவர். பிள்ளைகளுடன் இப்படி நடந்துகொண்டால் எதையும் சிறப்பாகச் செய்ய வேண்டும் என்ற எண்ணம் பிள்ளைகளின் உள்ளத்தில் பிறப்பதில்லை. நான் எதைச் செய்தாலும், எப்படிச் செய்தாலும் எனது பெற்றோர் குறைதான் கூறுவார்கள் என்ற மனநிலையுடன்தான் செயற்படுவார்கள். எனவே சிறப்பாகச் செய்ய வேண்டும் என்று கவனமெடுத்துக் கருமமாற்ற மாட்டார்கள். அவர்களின் பணியைப் பார்த்துப் பெற்றோர் பாராட்டுவர் என்ற நிலையிலிருந்தால் பாராட்டைப் பெறுவதற்காக, பெற்றோரின் மனதைப் பரவசப்படுத்துவதற்காகக் கூடிய அவதானிப்புடன் செயற்படுவர். இது குழந்தைகளிடம் ஆற்றலையும், ஆளுமையையும், ஆக்கத்திறனையும் அதிகரிக்கும்.

சிலர் பிள்ளைகளின் குற்றங்களின் போது அவர்களை மட்டரகமாகப் பேசுவர். "இவன் ஒன்றுக்கும் உதவமாட்டான்!", "இவன் மாடு மேய்க்கத்தான் சரிப்படுவான்!", "இவனைப் பெற்றதற்கு ஒரு உலக்கையைப் பெற்றிருக்கலாம்!" இப்படியெல்லாம் குழந்தைகளைக் குறைத்துப் பேசிக்கொண்டிருந்தால் அவர்களது உள்ளத்திலேயே அவர்களைப் பற்றிய மட்டரகமான எண்ணம் எழுந்து விடும். இதன் பின்னர் இவர்கள் எந்தப் பொறுப்புக்களையும் ஏற்க அஞ்சுவர். நான் எதற்கும் இலாயக்கற்றவன் என்ற எண்ணம் அவர்களது ஆழ்மனதில் பதிந்து அவர்களது முயற்சிகளுக்கும், திறமைகளுக்கும் முட்டுக்கட்டை போட்டுக்கொண்டே இருக்கும். எனவே குழந்தைகளைக் குறை கூறிக்கொண்டோ, மட்டரகமாகக் குறைத்து மதிப்பிடும் வண்ணமோ பேசிக்கொண்டிருக்கலாகாது.

அவர்களைப் போற்றும் வார்த்தைகளால் வார்த்தெடுக்க வேண்டும்; வளர்த்தெடுக்க வேண்டும். குறைகளை நிதானமாகவும், முறையாகவும் சுட்டிக்காட்டி அவர்களின் திறமைக்கான வாயில்களைத் திறந்து விடவேண்டும்.

“நான் நபி(ﷺ) அவர்களுக்கு 10 ஆண்டுகள் பணிவிடை செய்துள்ளேன். அல்லாஹ்வின் மீது சத்தியமாக அவர்கள் என்னைப் பார்த்து “சீ..!” என்றோ, நான் செய்த ஒரு செயல் குறித்து “ஏன் செய்தாய்?” என்றோ, நான் செய்யாத ஒரு செயல் குறித்து “ஏன் செய்யவில்லை?” என்றோ கேட்டதில்லை என்ற அனஸ்(ﷺ) அவர்களின் கூற்றுக் குறித்துச் சிந்திப்பது அவசியமாகும்.

இதேவேளை, குழந்தைகளுக்கு எதிராகப் பெற்றோர்கள் சபிப்பதையும், திட்டுவதையும் அவசியம் நிறுத்தியாக வேண்டும். சில பெற்றோர் – குறிப்பாகத் தாய்மார்கள் தமது பிள்ளைகளைச் “சனியன் பிடித்தது! செத்துத் தொலைஞ்சால் நிம்மதி! இதுல வாயில மண்ணப் போட..!” என்று திட்டித் தீர்ப்பார்கள்.

திட்டுவதைப் பொதுவாக இஸ்லாம் தடுக்கின்றது. பெற்றோர்கள் குழந்தைகளுக்குச் செய்யும் துஆக்கள் விரைவாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. இந்த வகையில் பெற்றோர் தமது குழந்தைகளின் நலனுக்காகப் பிரார்த்திக்க வேண்டும். இதற்கு மாற்றமாகக் குழந்தைகளுக்கு எதிராகத் திட்டுவது கண்டிக்கத் தக்கதாகும்.

**“உங்களுக்கு எதிராகவோ, உங்கள் குழந்தைகளுக்கு எதிராகவோ, உங்கள் பணியாளர்களுக்கு எதிராகவோ,**



**உங்கள் சொத்துக்களுக்கு எதிராகவோ நீங்கள் பிரார்த்திக்காதீர்கள். கேட்பதை அல்லாஹ் வழங்கும் ஒரு நேரம் உள்ளது. அந்த நேரத்தில் துஆக் கேட்கப்பட்டு விட்டால் பதிலளிக்கப்பட்டு விடும் என நபி(ﷺ) அவர்கள் கூறினார்கள்.”**

அறிவிப்பவர்: ஜாபிர்(ﷺ)
ஆதாரம்: முஸ்லிம்

குழந்தைகளைத் திட்டுவோர் இந்த ஹதீஸைக் கவனத்திற் கொண்டு தம்மைத் திருத்திக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளனர்.

## உற்சாகமூட்டப் பரிசில்கள் வழங்குதல்:

குழந்தைகளின் ஆற்றல்களையும், ஆளுமையையும் வளர்ப்பதற்காக அவர்களிடையே போட்டி வைத்துப் பரிசில்கள் வழங்கலாம்.

நபி(ﷺ) அவர்கள் – அப்துல்லாஹ், உபைதுல்லாஹ், இப்னு அப்பாஸ் போன்றோரை ஒரு வரிசையில் நிறுத்தி வைத்து, யார் என்னிடம் முதலாவது வருகிறாரோ அவருக்கு இப்படி இப்படிப் பரிசு வழங்குவேன் என்று கூறுவார்கள். அவர்களும் போட்டி போட்டுக்கொண்டு ஓடுவார்கள். வந்த வேகத்தில் அவர்கள் நபி(ﷺ) அவர்களது மார்பின் மீதும், தோளின் மீதும் விழுவார்கள். நபியவர்களும் அச்சிறுவர்களை வாரியணைத்து அன்பு முத்தம் பொழிவார்கள்’ என அப்துல்லாஹ் பின் ஹாரிஸ்(ﷺ) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

எனவே, பாராட்டுடன் பரிசில்களும் இணைந்து கொண்டால் அவர்களின் உற்சாகமும், உத்வேகமும் உச்சக் கட்டத்திற்கு உயரும்.

## அறிவைத் தூண்டல்:

குழந்தைகளின் சிந்திக்கும் திறனை வளர்ப்பதற்காக அவர்களிடம் கேள்வி கேட்டு அவர்கள் சரியான பதிலளிக்கும் போது அவர்களைப் பாராட்டலாம்.

**"இப்னு உமர்(ؓ) அவர்கள் கூறுகிறார்கள். ஒரு நாள் நபி(ஸல்) அவர்கள், 'ஒரு மரம் உள்ளது. அதன் இலை விழாது. அது முஸ்லிமுக்கு ஒப்பானது. அது என்ன மரம்? என்று எனக்குக் கூறுங்கள்!' என்றார்கள். மக்கள் ஏதோ பாலைவன மரம் என எண்ணினர். எனினும் அது ஈத்தமரம் என நான் நினைத்தேன். ஆனால் வெட்கத்தால் கூறவில்லை. பின்னர் 'அது என்ன மரம்? என்று நீங்களே கூறுங்கள்!' எனக் கேட்ட போது நபி(ﷺ) அவர்கள் 'அது ஈத்தமரம்!' என்று கூறினார்கள்."**

(புகாரி, முஸ்லிம்)

இது போன்ற கேள்விகள் சிறுவர்களைச் சிந்திக்கத் தூண்டும். பழமொழிகள், விடுகதைகள், புதிர்க் கணக்குகள் என்பவையும் இந்த வகையில் பெரிதும் உதவக் கூடியவையாகும்.

## குழந்தைகளிடையே பாரபட்சம் வேண்டாம்:

சில பெற்றோர் தமது குழந்தைகளுக்கிடையே பாரபட்சம் காட்டுவர். ஆண் பிள்ளைக்கும், பெண் பிள்ளைக்குமிடையில் பாரபட்சம் காட்டுவர். சில வீடுகளில் மூத்தபிள்ளை-இளைய பிள்ளைக்கிடையே பாரபட்சம் காட்டப்படுவதுண்டு. இது தவறாகும். இந்த நடைமுறையால் குழந்தைகளுக்கு இடையே சகோதர பாசம் செத்துப் போய் விடுகின்றது. குரோத எண்ணம் ஏற்படுகின்றது. போட்டியும், பொறாமையும் அவர்கள் மத்தியில் ஆதிக்கம் செலுத்துகின்றன. இதனால்



அவர்களது உள்ளம் சுருங்கி விடுகின்றது. விட்டுக் கொடுக்கும் இயல்போ, தாராளத் தன்மையோ, பணிந்து போகும் பண்போ, பகிர்ந்துண்ணும் பக்குவமோ அவர்களிடம் ஏற்பட வழியற்றுப் போகின்றது. எனவே பெற்றோர் இது விடயத்தில் அதிக அக்கறை காட்ட வேண்டும்.

உங்கள் குழந்தைகள் அனைவரும் உங்கள் குழந்தைகளே! அவர்கள் மீது பாசம் வைப்பதில் உள்ளத்தைச் சமநிலையில் வைத்துக்கொள்ள முடியாது. இருப்பினும் பாசத்தை வெளிப்படுத்தும் விதத்தில் ஏற்றத் தாழ்வோ, வித்தியாசங்களோ ஏற்பட்டு விடக்கூடாது.

**"அல்லாஹ்வை அஞ்சிக்கொள்ளுங்கள்! உங்கள் குழந்தைகளுக்கிடையில் நீதமாக நடந்துகொள்ளுங்கள்! என நபி(ﷺ) அவர்கள் கூறியுள்ளார்கள்."**

(முஸ்லிம்)

ஒரு நபித்தோழர் தனது ஒரு குழந்தையை அன்போடு மடியிலும், மற்றொரு குழந்தையை ஒதுக்கியும் வைத்த போது "இவ்விருவர்களையும் நீ சமமாக நடத்தக் கூடாதா?" என நபி(ﷺ) அவர்கள் கண்டித்தார்கள்.

ஒரு நபித்தோழர் தனது ஒரு பிள்ளைக்கு ஒரு தோட்டத்தை அன்பளிப்பாக வழங்குவதாகவும், அதற்கு நபி(ﷺ) அவர்களைச் சாட்சியாக இருக்குமாறும் கேட்டுக்கொண்டார். நபி(ﷺ) அவர்கள் "உனக்கு வேறு பிள்ளைகள் இருக்கின்றார்களா?" எனக் கேட்டார்கள். அவர் "இருக்கின்றார்கள்!" என்று கூறியதும், "இதே போன்று அவர்களுக்கும் வழங்கியுள்ளாயா?" எனக் கேட்டார்கள். நபித்தோழர் "இல்லை!" என்றதும், "இந்த

அநியாயத்திற்கா என்னைச் சாட்சியாக்குகின்றாய்?" என நபி(ﷺ) அவர்கள் கண்டித்தார்கள். எனவே பெற்றோர்கள் குழந்தைகளுக்கு மத்தியில் பாரபட்சம் காட்டி அவர்களின் ஆளுமையை ஆணி வைத்து அறையும் அநியாயத்தை அவசியம் அகற்றியேயாக வேண்டும்.

## ஒழுக்க விழுமியங்களைப் போதித்தல்:

நபி(ﷺ) அவர்கள் தம்மோடு அண்டி வாழ்ந்த சிறுவர்களின் ஒழுக்கம், பாதுகாப்பு, நலன் அனைத்திலும் அக்கறை காட்டியுள்ளார்கள்.

**"ஹிஜாப் சம்பந்தப்பட்ட சட்டம் இறக்கப்படுவதற்கு முன்னர் அனஸ்(ؓ) அவர்கள், நபி(ﷺ) அவர்களிடம் 'சர்வசாதாரணமாக அனுமதியின்றியே வந்து செல்வார்கள். ஹிஜாப் சட்டம் அருளப்பட்ட போது அனஸ்(ؓ) அவர்கள், நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்கள் 'மகனே! அப்படியே நில்லுங்கள்! உள்ளே நுழைவதற்கான சட்டம் மாற்றப்பட்டு விட்டது. நீங்கள் உள்ளே நுழைவதென்றால் அனுமதி பெற்றே வரவேண்டும்' எனக் கூறினார்கள்."**

அறிவிப்பவர்: ஆயிஷா(ரழி)
ஆதாரம்: புகாரி – அதபுல் முப்ரத்

சிறுவர்கள் – குறிப்பாக 3 நேரங்களில் வீட்டில் அறைகளுக்குள் நுழைவதாக இருந்தால் கூட அனுமதி பெறவேண்டும்.

**"நம்பிக்கை கொண்டோரே! உங்களது அடிமைகளும், உங்களில் பருவ வயதை அடையாதவர்களும், பஜ்ரு தொழுகைக்கு முன்னரும், உங்கள் (மேலதிக) ஆடைகளைக் களைந்திருக்கும் நண்பகல் வேளையிலும், இஷாத் தொழுகையின் பின்னரும் ஆகிய மூன்று வேளைகளிலும் (உங்களிடம் நுழைய) உங்களிடம் அனுமதி கோரிக்கொள்ளட்டும். (இவை)**



**மூன்றும் உங்களுக்குரிய அந்தரங்க நேரங்களாகும். இவை அல்லாத வேளைகளில் (அவர்கள் உங்களிடம் வருவது) உங்கள் மீதும் அவர்கள் மீதும் குற்றமில்லை. உங்களில் சிலர் மற்றும் சிலரைச் சுற்றி வருபவர்களே!"**

*(24:58)*

பெண்கள் தங்கள் ஆடைகளைத் தளர்த்தியிருக்கும் சந்தர்ப்பங்களில் அனுமதி பெற்றே உள்ளே வரவேண்டும் என்பதைச் சிறுவர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும். இந்தப் பழக்கம் அவர்களின் ஆளுமையை வளர்க்கின்றது.

## பாதுகாப்புத் தேடுதல்:

குழந்தைகளின் வெளிப்படையான பாதுகாப்பில் மட்டுமன்றி, ஆன்மீக ரீதியான பாதுகாப்பிலும் பெற்றோரும், மற்றோரும் அதிக அக்கறை காட்ட வேண்டும்.

நபி(ﷺ) அவர்கள் ஹஸன்-ஹுஸைன்(ؓ) ஆகிய இருவருக்குமாக பின்வருமாறு பாதுகாப்புத் தேடுவார்கள்

**"அனைத்து வகைச் ஷைத்தான்களை விட்டும், விஷஜந்துக்களை விட்டும், நோவினை தரும் அனைத்து வகைக் கண்ணேறுகளை விட்டும் அல்லாஹ்வின் பரிபூரணமான வார்த்தைகளைக் கொண்டு நான் பாதுகாவல் தேடுகின்றேன்."**

அதே வேளை, இஸ்மாயீல்-இஸ்ஹாக்(عليه السلام) ஆகியோருக்கும் இவ்வாறு நபி இப்ராஹீம்(عليه السلام) பிரார்த்தித்ததாகவும் கூறுவார்கள்" என இப்னு அப்பாஸ்(ؓ) அவர்கள் கூறுகின்றார்கள். (அஹ்மத்)

எனவே, கண்ணுக்குப் புலப்படாத பாதிப்புக்களிலிருந்து எமது குழந்தைகளைப் பாதுகாக்கும்

விடயத்திலும் பெற்றோர் கவனஞ்செலுத்த வேண்டும்.

## படுக்கையை விட்டும் பிரித்தல்:

சிறுவர்கள் வளர்ந்து 7 வயதைத் தாண்டும் போது பெற்றோர்கள் அவர்களைத் தனியான படுக்கைக்கு மாற்ற வேண்டும். அவர்கள் தனியாகப் படுக்கும் போது தானும் பெரிய மனிதனாகி விட்டதாக உணர்கின்றனர். அவர்களுக்கு எனத் தனியறை-தனிக்கட்டில்-தனிமேசை என்று ஒதுக்கப்பட்டால் அதைப் பராமரிப்பதிலும், ஒழுங்குபடுத்துவதிலும் கவனம் செலுத்துகின்றனர். இது அவர்களின் ஆளுமை வளர்ச்சிக்கு வழிவகுக்கும்.

அடுத்து, சிறுவர்கள் குறிப்பிட்ட வயதை அடைந்த பின்னரும் அவர்கள் பெற்றோருடன் சேர்ந்து உறங்குவதில் பாரிய ஒழுக்க வீழ்ச்சிக்கான பாதைகள் திறக்கப்படுகின்றன. சிறுவர்கள் எதையும் அறியும் ஆவலில் உள்ளனர். சிலபோது பெற்றோரின் இல்லற நடத்தைகளைத் தூங்குவது போன்ற பாவனையில் அவர்கள் அவதானிக்கலாம். இதனால் அவர்களது நடத்தையில் பாரிய மாற்றம் ஏற்படும். 'இது என்ன?' எனச் செய்து பார்க்க முற்படுவர். சிலபோது பார்ப்பதில் ஆர்வம் அதிகரித்து விட்டால் இதற்காக முயற்சி செய்து பார்க்கும் மனநிலைக்கு மாறிவிடுவர். சிலர் இதில் உச்சக்கட்ட மனநிலைப் பாதிப்புக்குக் கூட ஆளாகுகின்றனர்.

இஸ்லாம் குழந்தைகள் 7 வயதைத் தாண்டிய பின்னர் ஒரே படுக்கையில் ஒன்றாகப் படுக்க வைப்பதையும், ஒரே போர்வையில் ஒன்றாகப் போர்த்திப் படுக்கும் நிலையைச் சகோதரர்களுக்கு மத்தியில் கூட தவிர்க்குமாறும் கட்டளையிடுகின்றது.



## நல்ல நட்பு:

மனிதனின் மன அமைதிக்கு நல்ல நட்பு அவசியமாகும். சிறுவர்களும், இளைஞர்களும் நட்பை மதிக்கின்றனர். எனவே குழந்தைகளின் நட்பு விடயத்தில் பெற்றோர் அதிக அக்கறை செலுத்த வேண்டும். நல்ல நட்புகளை ஏற்படுத்த வேண்டும். 10 வயதுப் பையன் 20 வயது இளைஞனுடன் நெருங்கிப் பழகுவது போன்ற நட்பு முறைகளைத் தவிர்க்க வேண்டும். தன்னினச் சேர்க்கையும், தவறான பாலியல் நடைமுறைகளும் பரவி வருவதால் குழந்தைகளின் நட்பு விடயத்தில் அதிக விழிப்புடன் இருக்க வேண்டும். குழந்தைகளுக்கு நல்ல நட்புகளை ஏற்படுத்திக் கொடுப்பதுடன் தீய நட்பின் தீங்கு பற்றியும் எச்சரிக்க வேண்டும்.

## தவறுகளைக் களைதல்:

குழந்தைகள்-வளர்ந்த வாலிபர்களின் நடத்தைகளை உன்னிப்பாக அவதானித்து அவர்களை வழிநடத்துவது அவசியமாகும்.

பழ்ல் இப்னு அப்பாஸ்(ﷺ) அவர்கள் நபி(ﷺ) அவர்களுக்குப் பின்னால் வாகனத்தில் இருந்தார். அப்போது கருப்புக் கன்னங்களையுடைய ஒரு அழகான பெண் நபி(ﷺ) அவர்களிடம் மார்க்க விளக்கத்தைக் கேட்பதற்காக வந்தாள். இந்த இளைஞர் அந்தப் பெண்ணைப் பார்த்தார். நபி(ﷺ) அவர்கள் அவர்களது முகத்தை மறுபக்கம் திருப்பி விட்டார்கள் என நபிமொழிகள் கூறுகின்றன. இங்கே நபி(ﷺ) அவர்கள் அந்த இளைஞனின் இயல்பைப் புரிந்து அவரது நடத்தையை அவதானித்து வழிநடத்தியிருப்பதை அவதானிக்கலாம்.

## அவர்களின் உரிமைகள் விடயத்தில் அனுமதி பெறல்:

குழந்தைகளின் உரிமைகள் விடயத்தில் பெற்றோர் நிதானமாகச் செயற்பட வேண்டும். பிள்ளைகளின் உரிமைகளைப் பெற்றோரோ, பெரியவர்களோ அலட்சியம் செய்யக்கூடாது.

**"நபி(ﷺ) அவர்கள் ஒரு சபையில் இருந்த போது பால் கொண்டுவரப்பட்டது. அவர்கள் அதை அருந்தி விட்டு வலது பக்கம் பார்த்த போது இப்னு அப்பாஸ்(ﷺ) அவர்கள் இருந்தார்கள். இடது பக்கத்தில் பெரிய ஸஹாபாக்கள் இருந்தனர். நபி(ஸல்) அவர்கள் பெரிய ஸஹாபாக்களுக்குப் பாலை வழங்க விரும்பினார்கள். அந்தச் சிறுவரிடம் 'இந்தப் பெரியவர்களுக்கு முதலில் பாலை வழங்க எனக்கு நீ அனுமதி தருவாயா?' எனக் கேட்டார்கள். அவர் மறுத்த போது அவரிடமே முதலில் வழங்கினார்கள்."**

(புகாரி, முஸ்லிம்)

பாலை முதலில் பெறும் உரிமையைக் கூட நபி(ஸல்) அவர்கள் மறுக்க விரும்பவில்லை. எனவே குழந்தைகளின் நியாயமான உரிமைகள் பெற்றோர்களால் பறிக்கப்படக் கூடாது.

## நல்ல வாழ்க்கைத் துணையைத் தேடிக் கொடுத்தல்:

குழந்தைகள் பெரியவர்களானதும் அவர்களுக்கு மார்க்க ஒழுக்கமுள்ள நல்ல துணையை மணமுடித்துக் கொடுப்பது பெற்றோரின் பொறுப்பாகும். ஆணோ, பெண்ணோ யாராக இருந்தாலும் அவர்கள் சம்மதிக்காதவர்களுடன் நிர்ப்பந்தமாக நிச்சயதார்த்தம் செய்யக் கூடாது. சில தாய்மார் 'நீ எனது மருமகளைத்தான்



முடிக்க வேண்டும்!' என்று மகனையும், 'அவன்தான் உனது முறைமாப்பிள்ளை!' எனப் பெண்ணையும் நிர்ப்பந்திக்கின்றனர். இது தவறாகும்.

சில பிள்ளைகள் பெற்றோர்களைப் பற்றிச் சிந்திக்காமல் அனைத்தையும் தாமே செய்து முடித்து விடுகின்றனர். இதுவும் தவறாகும். பிள்ளைகள் காதலித்துத் திருமணம் செய்வதை அனுமதிக்க முடியாது. இதை இஸ்லாம் கண்டிக்கின்றது. எனினும் ஒவ்வொரு மனிதனுக்கும் தனது வாழ்க்கைத் துணை பற்றிய ஆசைகளும், ஆர்வங்களும், கற்பனைகளும் இருக்கும். இதனைக் கவனத்திற்கொண்டு அவர்களின் ஆசைக்கு ஏற்ப தகுதியான துணையைப் பெற்றோர் திருமணம் செய்து வைப்பது பெற்றோரின் கடமையாகும்.

பெற்ற பிள்ளைகளுக்கு நல்ல துணையைத் தேடிக் கொடுத்துவிட்டால் அவர்கள் அடுத்தகட்ட சமூகத்திற்கான அடிக்கற்களாக மாறிவிடுவர். இதன் மூலம் நல்ல சந்ததிகளும் நல்ல சமூகமும் வளர்ந்து கொண்டு வரும். இந்த சமூக மாற்றத்திற்கு அல்லாஹ் அருள் புரிவானாக!



